# நடந்து கொண்டே இரு



எழுச்சிக்கவிஞர்
வ.கோ. சண்முகம்

# நடந்து கொண்டே இரு!


ஆசிரியர்
'எழுச்சிக் கவிஞர்'
**வ.கோ. சண்முகம்**

தொகுப்பாசிரியர்
**எஸ். ராஜகுமாரன்**





அணி
புதிய எண்.14, சிவாஜி தெரு,
தி.நகர், சென்னை - 600 017.

நடந்துகொண்டே இரு
Nadandhukondae Iru

ஆசிரியர் - வ.கோ. சண்முகம்
Author - Vaa.Ko.Sanmugam

தொகுப்பாசிரியர் - எஸ்.ராஜ குமாரன்
Compiling Editor - S. Raaja kumaran

தன்னம்பிக்கைக் கவிதைகள்
Self Motivation Poems

பதிப்பாளர் - ஆர்.பரிமளா
Publisher - R. Parimala

முதற்பதிப்பு - 1981 / மறுபதிப்பு - 2007
First Edition - 1981 / Re-edition - 2007

பக்கங்கள் - 96 / விலை ரூ. 45/-
Pages - 96 / Price Rs. 45/-

ஒளி அச்சு - தமிழ்க்கூடம், சென்னை - 17.
Lazer Typeset - Thamizkkuudam, Chennai - 17.

நூல் வடிவமைப்பு - இரா. செல்வசுந்தரம்
Book Design : R.Selvasundaram

மேல் அட்டை வடிவமைப்பு - சித்தன் கலைக்கூடம்
Wrapper Design : Sithan Kalaikkoodam, Chennai - 17.

வெளியீடு - அணி
புதிய எண்.14, சிவாஜி தெரு, தி.நகர், சென்னை - 600 017.
**Publisher**
**ANI**, New No.14, Sivaji Street, T.Nagar, Chennai -17.
Mobile : 98401 24602



தமிழறிஞர் நூல்கள் நாட்டுடைமை திட்டத்தின் கீழ்,
2007-2008 தமிழகஅரசு நிதிநிலை அறிக்கையின் வாயிலாக
'எழுச்சிக் கவிஞர்' மாவெண்கோ என்ற
வயலூர்சண்முகம் அவர்களின் நூல்களை நாட்டுடைமை
ஆக்கிய தமிழக முதல்வர்
'முத்தமிழறிஞர்' டாக்டர் கலைஞர்
அவர்களுக்கு நன்றி!

# 'எழுச்சிக் கவிஞர்'
# வ.கோ. சண்முகம்
# வாழ்க்கைக் குறிப்பு

| | | |
|---|---|---|
| இயற்பெயர் | : | வ.கோ. சண்முகம் |
| புனைப்பெயர்கள் | : | மாவெண்கோ, செம்மல், வயலூர்சண்முகம் |
| பிறப்பு | : | 20.02.1924 |
| பிறப்பிடம் | : | வயலூர் கிராமம், திருவாரூர் மாவட்டம் |
| பள்ளிக்கல்வி | : | போர்டு ஹை ஸ்கூல் - திருவாரூர் |
| கல்லூரிக்கல்வி | : | இண்டர்மீடியட், அண்ணாமலை பல்கலைக் கழகம் - சிதம்பரம் |
| படைப்புகள் பிரசுரமான | : | முரசொலி, திராவிட நாடு, அறப்போர், கலைக்கதிர் |
| பத்திரிகைகள் | : | பிரசண்ட விகடன், கண்ணன், விஜயா, தமிழ் சினிமா, கல்கி, கோகுலம், ஆனந்தவிகடன், மாதஜோதிடம், பால்யன் |

கவிதைகளின் காலம் : மரபுக் கவிதைகள் -
1940 முதல் 1980 வரை
புதுக்கவிதைகள் -
1970 முதல் 1980 வரை

நூல் விவரம் : 1.தெற்கு ஜன்னலும் நானும்
(மரபு மற்றும் புதுக் கவிதைகள் தொகுப்பு)

: 2.டாணா முத்து
(சிறுவர் கதைப் பாடல்கள்)

: 3. சின்னப்பூவே மெல்லப் பாடு
(குழந்தைப் பாடல்கள்)

: 4. எதைத் தேடுகிறாய்?
(தத்துவக் கவிதைகள்)

: 5. நடந்துகொண்டே இரு
(இளைஞர் கவிதைகள்)

: 6. மெழுகுச் சிறகுகள்
(மரபுக் கவிதைக் கதைகள்)

: 7. புதிய தெய்வம்
(புதுக்கவிதை நாவல்)

: 8. அன்னை ஒருத்தி
(அஷ்டலட்சுமி காவியம்)

: 9. உப்பு மண்டித் தெரு
(புதுக்கவிதைச் சிறுகதைகள்)

: 10. வென்றார்கள் நின்றார்கள்
(பல்துறை சாதனையாளர்கள் பற்றிய கவிதைகள்)

: 11. தைப்பாவாய்
(மொழி, பண்பாடு சார்ந்த கவிதைகள்)

: 12. பாருக்கெல்லாம் பாரதம்!

| | | |
|---|---|---|
| இலக்கிய நண்பர்கள் | : | தமிழக முதல்வர் டாக்டர் கலைஞர், 'உவமைக் கவிஞர்'சுரதா, கவி.கா.மு.ஷெரீஃப், திரைப்பட வசனகர்த்தா ஆரூர்தாஸ், 'டார்ஃபிடோ' ஜனார்த்தனன், திரைப்படத் தயாரிப்பாளர் இராம.அரங்கண்ணல், 'சின்னக்குத்தூசி' தியாகராஜன் |
| இறுதி வாழ்வும் மறைவும் | : | 23.07.1983 |
| | : | தளத்தெரு கிராமம், காரைக்கால் (புதுச்சேரி மாநிலம்) |



# பதிப்புரை

'இன்றைய விதை, நாளைய செடி! நாளைய செடிகளின் கூட்டணியே வருங்கால வனம்!' என்பது இயற்கைக்குப் பொருந்தும். இளமைக்கும் பொருந்தும்.

ஒவ்வொரு காலகட்டத்திலும் வளமையான இளமை கொண்ட இளைஞர் திருக்கூட்டமே தேசங்களின் எதிர்காலங்களைத் தீர்மானிக்கிறது.

இளைஞர்களை நல்வழிப்படுத்தி, அவர்களுக்குள் புதைந்திருக்கும் ஆற்றலைப் புரிய வைத்து, சமூகக் கட்டடத்தின் தூண்களாக அவர்களை உருவாக்க வேண்டிய கடமை பெற்றோருக்கும், ஆசிரியருக்கும், பெரியோருக்கும் உண்டு.

இச்சமூகக் கடமை கலை இலக்கியவாதிகளுக்கும் கணிசமாக உண்டு!

'புதுக்கவிதை' வடிவம் தமிழிலக்கியக் களத்தில் முகிழ்ப்பதற்கு முந்தைய கால கட்டத்தில் இளைஞர்களுக்கு எழுச்சியூட்டக் கூடிய தன்னம்பிக்கையை, விடாமுயற்சியை, வெற்றியின் சூத்திரங்களை மரபுப்பா - வடிவங்களில் வடித்துள்ளார் 'எழுச்சிக்கவிஞர்' வயலூர் சண்முகம்.

வெளிச்சம் ததும்பும் வெற்றிகளை அடையத் துடிக்கும் இளையோருக்கு, இக்கவிதைகள் ஞானம் களஞ்சியமாகத் திகழ்கின்றன.

தமிழ்க்கவிதையுலகுக்கு 'அணி' சேர்க்கும் இத்தொகுப்பினை வெளியிடுவதில் 'அணி' பெருமிதம் கொள்கிறது.

அன்புடன்
ஆர்.பரிமளா



<u>நன்றி!</u>

நட்புக்கும்

உறவுக்கும்...

## ஒரு தடவையேனும்...

பூட்டிய உதடு மனமலடு!
போடா மூடா அதனைவிடு!
ஏட்டில் புனையாப் பாடல்களை
இசைக்கும் யாழாய் இதழ்திறப்பாய்!

சிரித்துச் சிரித்து விளையாடு!
சின்ன நிமிடமும் தொலைக்காதே!
அரிக்கும் கவலைகள் ஆயிரமா?
அவைகளைக் காலால் நசுக்கிவிடு!

வீணாய்ப்போன தென்னாளோ?
வினவிய நானே கூறுகின்றேன்,
வீணைப் பாட்டாய்ச் சிரிக்காமல்
விட்டு விட்ட நாளதுதான்!

ஆகவே மைந்தா சிரித்தாடு!
ஆயிரம் கைதட்டி மகிழ்ந்தாடு!
போகும் நாளில் ஒருதரமேனும்
பொங்கி மகிழ்ந்தே சிரித்தாடு!



## தேன் தூறல்

காற்றுக்குள் கவிதைஇட்டுக்
ககனவெளிப் பண்ணிசைத்து
ஊற்றுக்கண் திறந்துவிட்ட
உள்ளான்மப் பூரிப்பாய்

புவிச்செவிகள் புல்லரிக்கப்
புலமையுளம் தேன் டிக்கக்
கவிக்குரலில் தத்துவத்தின்
கனிவுரையைக் கேட்டிட்டோம்.

குள்ளமனம் பாறைநெஞ்சம்
கொண்டவர்க்கே சுதந்தரந்தான்
எள்ளலுறும் ஒருபொருளாய்,
'இல்லை' என ஆகும்.!

உற்றசமு தாயத்தின்
உறுப்பாகா ஒருவனையே
முற்றமுழு மனிதனென
மொழிந்திடவும் இயன்றிடுமோ?

ஓதும்சன நாயகத்தை
ஓராட்சி முறைஎன்றோ,
தோதான சட்டங்களின்
தொகுப்புறவே அதுவென்றோ

எண்ணிவிடல் சரியல்ல!
ஏற்றமிகு சனநாயகம்
கண்ணியமாம் வாழ்க்கை முறை,
கவின் நியதி தரமனைத்தும்.

நிச்சயித்தே நிலைநிறுத்த
நிறுவியதோர் ஏற்பாடே
இச்சையுடன்-அந்தரங்க
இதயமுறு தூய்மையுடன்

வல்லசன நாயத்தின்
மாண்புணர்ந்து காத்திடுவோம்
பொல்லாத வெறியர்கள்
போர்க்குணத்துத்தீயோர்கள்

எல்லோரும் சனநாயக
எதிரிகளே எதிரிகளே.
அல்லாடும் மாந்தர்குலம்,
அழுதரற்றும் மன்பதைதான்!

உய்யும்வழி அணுப்போரை
ஒழிப்பதொன்றே என்பதனை
அய்யன்திரு நேருமகன்
ஆக்கமுறும் தாரகமாய்

நமக்கீந்த பேறாகும்!
நானிலத்தின்வேராகும்!
இமைபனிக்க அவன்நாமம்
ஏத்துகின்ற இந்நாளில்

உட்பகையும் வெளிப்பகையும்
உறுமுகின்ற இத்தருணம்
நட்பாடிக் கைகுலுக்கி
நடைமுறையில் அய்க்கியத்தில்

பெருங்குடும்பப் பிரஜைகளாய்ப்
பிரபஞ்சம் ஒன்றுபட்டால்
வரும் இன்னல் வென்றிட்டே
வலிவுற்றே பொலிவுறலாம்!

அச்சத்தின் வெறுப்புணர்வின்
அடிவயிற்றில் கருவுற்றே
இச்சகத்தின் மாந்தர்களில்
இலட்சோப இலட்சம்பேர்

மாண்டொழிந்தே போவதற்கும்
மாறாப்பிணி தீமையெலாம்
பூண்டலைந்தே நலிவற்கும்
போரன்றோ காரணமாம்.

போர்துறந்த அமைதிதவழ்
புவிகாண நேருபிரான்
சீர்சிறக்கச்ச செய்தபணி
செப்பிடவும் ஏதுங்கொல்?

மூண்டுவரும் குரோத்தை
முறைகேடாம் ஆவேசத்தைத்
தீண்டவரும் ஆசைகளை
தீரமுடன் விட்டொழித்தே

நெட்டநெடும் பாட்டையிலே
நிமிர்ந்துநடை போட்டிடுவோம்.
பாரதத்தின் 'நேருசுடர்'
பார்முழுதும் ஒளிதீட்டும்

நேரத்தை நெருங்குகிறோம்
நினைவிருளுக்கப்பாலே
கொஞ்சிவரும் தென்றலது
கூவுவதை நாம் கேட்டோம்,

'அஞ்சாதே', 'அயராதே'
அவனுரைத்த பொன்னுரைகள்
இவைஇரண்டே நாமின்று
ஏந்துகின்ற முன்மொழிகள்!

வானொலியில் ஞானமுனி
வழங்கியதோர் தெற்றமுதத்
தேன்தூறல், 'அள்ளியுண்டே'
செகத்த லைமை ஏற்றிடுவோம்!



## கூவட்டும்

துன்பத்தின்-துரோகத்தின் ருசியால் இன்று
சூடுற்ற தலைமுறையின் சிந்த னையில்
முன்பிருந்த மெதுப்போக்கு இல்லை யேனும்
மூளியுற்ற நட்பாலே பயன்தான் ஏது?
தன்காலை வலுவாக ஊன்றிக் கொண்டால்
தடுமாறத் தள்ளாடத் தேவை இல்லை!
அன்பொன்றை அறமொன்றே ஆன்மா வாக
ஆகிவிட்ட நமக்கெதற்கு 'கிழட்டு நேசம்?'

வெள்ளையரின் விலங்கொடித்து உரிமை பெற்று
வேகமுற முன்னேறும் பாரதத்தை
முள்விதைத்துத் தடுக்கின்ற குரங்கு புத்தி
மூதறிஞப் பெரியவர்கள் திருவாய் மலர்ந்தே
'சொள்ளை இது. சொத்தைஅது. என்றே துணிந்து
சுதந்திரமாய் உளறுகின்ற கொடுமை வேறு
உள்நாட்டில் அரசுக்கே நாளும் நாளும்
ஓயாத தொல்லையென தடித்துப் போச்சு.

பொய்கொல்லப் பொய்ஏவி விடவா வேண்டும்?
புவிநெடுகில் அரசிடத்தும் மகிக ளிடத்தும்
மெய்யான நம்நிலையைப். பிரச்சனைகள்
மிகுகின்ற சிக்கல்களை உரித்துக் காட்டிச்
செய்முறையில் கருத்தோட்டப்போக்கில் மேலைச்
சிந்தனையில், தார்மீக அன்பை நம்பால்
பெய்திடவே வைப்பதுதான் பார தத்தின்
பிற்கால வெற்றிக்கே அடிக்கல் லாகும்.

'நள்ளிரவில் வையகமே உறங்கும் போது
நாம்விழித்தே எழுகின்றோம்' என்றே அந்நாள்
துள்ளுகின்ற பூரிப்பில் கனவு கொஞ்சச்
சொன்னானே நேருபிரான். ஆனால், ஆனால்
மெல்லமெல்ல அதுமாறி வையம் விழிக்கும்
வேளையிலே கொட்டாவி விட்டால், நம்மை
எள்ளுகின்ற புல்லர்களின் நாவில், நாமே
இனிப்பெடுத்துத் தடவுவதாய் ஆகி டாதா?

'சீலமுறு உண்மையுமே காலத் தாயின்
செல்வமகள்' என்பார்கள்! எதிரிகள்
வரவிருந்தும் இடமெல்லாம் உண்மைப் பெண்ணின்
வாழ்வுக்கும் கற்புக்கும் ஆபத் தேயாம்.
ஞாலத்தில் எதிரொலிக்கும் 'கொள்ளி நாக்கு'
கோலமிடும் பண்பாய 'இனியநாக்குக்
குயில்'களெல்லாம் கூவட்டும் திசைய னைத்தும்!



## வெல்வோம் வா!

எங்கோ ஓரிடம் நமக்குண்டு!
என்றோ ஓர் நாள் நமக்குண்டு!
அங்கே நாமும் அடைவோம் வா!
அந்நாள் கனவைப் படைப்போம் வா!

பாழ்செய் கவலைகள் முடிந்துவிடப்
பாயும் இருளும் விடிந்துவிட
வாழ்வுக் குயிலின் பண் கேட்க
வானப் பேரொளி கண்சிமிட்டும்

அங்கே, அங்கே, செல்வோம் வா!
அன்றே அன்றே வெல்வோம் வா!

தோற்ற கைகளே வெல்வதுண்டு!
தூர்ந்த ஊற்றும் வாய்திறக்கும்!
நாற்றை நடுவதே நம்கடமை!
'நாளைய அச்சம்' வெறும் மடமை!

தோழனே! அதனால் எழுவோம் வா!
செவ்வயல் இன்றே உழுவோம் வா!



## உங்களுக்கு

அண்மையிலே ஜனாதிபதி ராதா கிருஷ்ணன்.
ஆமதாபாத் விழாவொன்றில் பேசும்போது-
உண்மையிலே 'கசப்பான உண்மை' ஒன்றை
உள்ளங்கை நெல்லியென எடுத்துச் சொன்னார்.

'பலவாண்டு ஆசிரியனாய் இருந்த வன்நான்
படிக்கவரும் மாணவரை எய்தும் தொல்லை
அலைக்கழிக்கும் பிரச்சனைகள் அனைத்தும் அறிவேன்
ஆனாலும் இன்றுள்ள போக்கே வேறு.

இப்போது மாணவர்க்கு வாழ்க்கை நோக்கில்
எந்தவிதக் குறிக்கோளும் இருக்கக் காணோம்!
ஒப்புக்கே படிக்கின்றார்; கல்வி யாலே
ஒருபயனும் விளையாதென எண்ணுகின்றார்.!

எதிர்காணும் வாழ்வதனில் மாணவர்க்கே
இம்மியதும் நம்பிக்கை துளிர்க்கவில்லை!
கொதிக்கின்ற நெஞ்சத்தில் அமைதி வந்தா
கொலுவிருக்கும்? மென்மைக்கு வழிதான் உண்டா?

தேசத்தில் முளைக்கின்ற ஆர்ப்பாட் டங்கள்!
தீச்செயல்கள், வன்முறைகள் எல்லாம் சூழ்ந்தே
மாசணுகா இளமனத்தில் விஷத்தை தூவி
மயங்குகின்றார் குழம்புகின்றார் மாணவர்கள்.

இதற்கெல்லாம் பொறுப்புள்ள குற்ற வாளி
யார் என்றால் நாமேதான்! நம்மைத் தானே,
அதற்கென்றும் இதற்கென்றும் மாணவர்கள்
அடியொற்றி நகலெடுத்து வருகின்றார்கள்?

முன்னோடும் தலைவர்களாம் நாமும் நல்ல
முறையோடும் தெளிவோடும் நடந்து கொண்டால்-
பின்னோடி வருகின்ற மாண வர்க்கு
பிரத்தியட்ச யதார்த்தமாம் உணர்வு பொங்கும்.

'சுதந்திரத்தைப் பெறுவதற்கு வன்முறையைச்
சூறாவளிக் கிளர்ச்சிகளைத் தவிர்ப்பீர்!' என்றே
இதமொழிகள் நமக்குரைத்தான் காந்தி தேவன்!
இன்றுநம் மாணவர்க்கும் இதுவே சொல்வேன்.''

பெற்றமிகு விற்பன்னர் ராதாகிருஷ்ணப்
பெருந்தகையின் சொல்லமுதப் பிழிவே இதுவாம்!
நெற்றிந ரம்புப்பு டைக்கச் சிந்தை குன்றி
நிலைகுலையும் போக்காளர் கவனிக்கட்டும்!



## இளைய பாரதத்துக்கு

வசந்தக் கொழுந்துநிகர் வாலிபத்தின் பேரணியே!
வசந்தத் தனித்தலைவன் ஒருதடவைக் கூறியதை
இங்கின்றே பேசுகின்றேன் ஏற்றிடுக! போற்றிடுக!
தங்கத் திருநாக்கின் தத்துவச் சாரமிது.

இக்கால வாலிபர்பால் எந்நோக்கும் காணோமே!
வக்கணையாய் எல்லோரும் வாயாரப் பேசுவதே
தொழிலாய் பெருக்கித் தொலைக்கின்றார் வாழ்வதனை
எழிலும் இளவயதும் ஏதமிலா நல்லுடலும்

கொண்டபெரும் வாலிபக் குலமனைத்தும் சேர்க்கின்ற
தொண்டு புரியத் துயர்களைய வந்திடுவீர்!
அந்நாளில் வாலிபர்கள் ஆகும் இருபதுக்குள்
பொன்னும் தியாகம் புரிந்திடவே முனைவார்கள்.

துன்பம் வரும்போது தூர விலகாமல்
இன்பம் அதுவென்றே எண்ணிடுவீர் தாவிடுவீர்.
என்றழைத்தே வீரஇளைஞர் திருப்படையை
ஒன்றி எழுந்தே உலகாளக் கூவுகிறான்.

கள்மயக்கம்! கன்னிதரும் காமச்சுக மயக்கம்!
உள்மயக்கம் காட்டும் ஒவ்வா மயக்கமெலாம்
பின்னடையச் செய்யும் பெருமயக்கம் உங்களுக்கே
என்ன இருந்தாலும் இப்போதே போட்டுவிட்டுச்

சமதர்ம சமுதாயத்தின் சொர்க்கத்தை ஆக்கிடவே
சாதிமதப் பாசாங்கை ஓட விரட்டிடவே
இன்றே எழுந்திடுவீர். எக்காலம் ஊதிடுவீர்!
நன்றுவரும் புதுஉதயம் நமக்கென்றே முரசைறைவீர்!



## எது சிம்மாசனம் ?

மகத்தான சாதனைகள் புரிவ தற்கே
வல்லிரும்பு நிகர்த்தான 'ஒழுங்கு' வேண்டும்!
தகராத அசையாத கட்டுப் பாடு,
தர்க்கத்தால் வாக்குவாத மாய்மா லத்தால்
விகசித்தே நம்முள்ளே மலர்ந்திடாது!
விவாதங்கள் விமர்சனங்கள் உதவி செய்யா.!
மிகவாகும் எதிர்ப் பென்னும் பள்ளிக் கூடம்
விளக்குகின்ற பாடந்தான் ஒழுங்காம் நேர்த்தி.!

முன்னேறும் படைவீரன் வெற்றி பற்றி
முச்சந்தி தனில்நின்றே விவாதிப் பானா?
தன்கடமை பங்குபணி அத்த னையும்
தவறாமல் செய்தாலே வெற்றி வாய்க்கும்
என்பதையே அவனுணர்வான் இவ்வா றேதான்
இன்றுள்ள பொறுப்புகளை ஒழுங்காய்ச் செய்தால்
என்றென்றும் மனதுக்குள் குழப்பம் இல்லை!
எதிர்கால அய்யங்கள் தோன்ற மாட்டா!

‘ஆணைகள் சிலசமயம் நீதி யற்ற
ஆத்திரத்தில்-அவசரத்தில் அமைந்த போதும்
பேணுகின்ற ஒழுங்காலே கட்டுப் பாட்டால்
பின்பற்றிச் செய்வதுதான் உண்மை யான
வீணனல்லாத் தொண்டனவன் கடமையாகும்!
விருப்புடனே அறிவாலே ‘தலைவன்’ தன்னை
மாண்புறவே தேர்ந்தெடுத்த பின்னர் அவனை
மறுப்பதுவும் வெறுப்பதுவும் ஒழுங்கே அல்ல!

சீறிவரும் வெள்ளத்தைத் தடுப்ப தற்குத்
திட்டமிட்டே கட்டுகின்ற அணைகள் போல
மாறுபடும் கருத்தோட்டம் குழப்பங்கட்கு
வலுவான ஒழுங்கொன்றே அணைக்கட் டாகும்!
மீறுகின்ற செயல்எதுவும் நம்மை எல்லாம்
மீளாத அழிவுக்கே கொண்டு செல்லும்!
மாறுமாறாய் நாம் நடந்தோம் என்றால் உலகில்
மரியாதைக் குறைவதற்கு இடமாய்ப் போகும்!

பதவிகளோ தகுதிகளோ ஒழுங்கு செல்லும்
பாதையினை அடைப்பதற்கு தடைக்கல் அல்ல!
சுதந்திரமே ஒழுங்கினிற்றே பிறப்ப தாகும்!
தூயமனம் பக்குவத்தால் கட்டுப் பாட்டால்
இதமான நம்பிக்கை ஊற்றெ டுக்கும்!
எனக்கென்னும் உனக்கென்னும் போக்கைவிட்டுச்
சகவிகிதம் சமூகத்தில் ஒழுங்கை ஏற்றால்
சமுதாயம், தனிமனிதன் வளங்கள் பெருகும்.!

ஏதேனும் சர்ச்சையிலே சிம்மா சனத்தில்
இருக்கின்ற அரசன்தான், கீழுள்ளோனை
யாதாயினும் தீர்ப்பளிக்க பணித்தான் என்றால்
அவன் எடுத்துக் கூறுகின்ற நல்ல தீர்ப்பைப்
பேதமின்றி ஏற்பதுதான் நியாய மாகும்!
பிறிதொன்று இதுவன்றி ஒழுங்கு இல்லை!
நீதிக்கு நிறம் தரமோ ஏற்ற இறக்க
நிலைமைகளோ சிறிதேனும் இருத்தல் இல்லை!



## கப்பல்

காலம் என்னும் கடல்வழியைக்
கடக்கும் கப்பல் வாழ்க்கையடா!
சால அதனை உந்துகின்ற
சாகஸக் காற்றே நம்முணர்வாம்!

நல்லது கெட்டது கண்டறியும்
ஞால அனுபவப் பகுத்தறிவே
வல்ல வாழ்வுக் கப்பலதை
வகையாய் ஓட்டும் மாலுமியாம்!

உந்தும் காற்றே ஆற்றாலோ-
ஓட்டும் மாலுமியை இழந்தாலோ-
வந்த இடமும் செல்லிடமும்
மயங்கிக் கப்பலே மூழ்கிவிடும்!



# அவனாகவே நாம்!

ஆயிரம் கனவுகள்
அவன்கா ணுகின்றான்
ஆனால் ஒரு கரமும்
அவனுக் கில்லை!
நீயும் நானும்
பெற்ற கரங்களே

நிஜமாய் அவனது
நேர்த்திக் கரங்கள்!
ஆனால் அவன் செயல்
எதனையும் செய்ய
நமது விரல்களை
நாமசைப் பதில்லை!

ஆயிரம் செய்திகள்
அவன்சொல்லத் துடிக்கிறான்
ஆனால் ஒருகாலும்
அவனுக் கில்லை.
நடக்கும் கால்களை
நகர்த்தலே இல்லை

19

அவன் ஒரு ஊமை!
குரல்கள் அற்றவன்!
அனலாய்க் காந்தியச்
சத்தியம் பேச
நீயோ, நானோ
நினைப்பதே இல்லை

நெட்டிப் பொம்மையாய்
நிதமும் உழல்கிறோம்!
வையம் முழுவதும்
வடிவமைத் திடவே
வண்ண வண்ண
மண்பிசைந் திடுகிறான்.

அன்பு இதயமும்
அன்பு இதழ்களும்
அன்புக் கரங்களும்
அவனது தேவை!
ஆனால், ஐயோ!
அவைகள் மூன்றும்
அவனிடம் இல்லையே
அளிப்போம் வா! வா!



# தோட்டம்

வாழ்வின் வெளியில் தோட்டம் போட
வழிதான் எதுவோ உனக்குத் தெரியுமா?
தாழ்வு எண்ணம் என்னும் பொட்டலைத்
தவிடாய் இடித்துச் சமமாய் ஆக்கு!

பழக்கம் என்னும் பக்குவ விதைகளைப்
பாத்தி பாத்தியாய் தினமும் அதில்இடு!
அழிக்க முடியா உறுதி வேலியை
அதற்கே காப்பாய் அமைத்துக் கட்டு!

பாத்தியில் விழுந்த 'பழக்க விதைகள்'
பண்புள செயல்களாய் துளிர்க்கும் தழைக்கும்!
நேர்த்தியாம் செயல்களை விதைப்பாய் அதனால்
நிறைசுவைக் கனிகள் பயன்களாய் விளையும்!



## நெருப்பின் நிஜம்

நெருப்பைப் பார்த்தால் தெரியும்! - ஒரு
நிஜமும் உனக்கே புரியும்!
இருப்பே கொள்ளா மோகம்! - மேலே
ஏறவே பழகிய தேகம்!
செருப்பே தேடா வேகம்! - இரையைத்
தின்னவே நெஞ்சில் தாகம்!

நெருப்பைப் பார்த்தால் தெரியும்! - அதுதான்
நிதமும் நிமிடமும் போரே புரியும்
விஷத்தையும் தின்று போகும்! - தடுக்கும்
வேலிகளும் அதற்கிரை ஆகும்!
மழைக்குக் குமுறும் வானம் - கண்டும்
மருண்டிடா வீரயாகம்

திக்குத் திசைகளும் இல்லை! - நெருப்பைத்
திருப்பி விடுவதும் இல்லை!
மக்களைப் பிரியாத் துணையாம்! - அதன்
மனமோ அறத்தின் சுனையாம்!



## பூட்டாதே

பூத்தப் புதுமலர்போல் - அன்பு
பொங்கும் இதயமதை
காத்த அருட்கனியாய் - பரிவு
கமழும் இதய அறை
சாத்திப் பூட்டாதே - கெட்டித்
தாழிலே மாட்டாதே
மூத்தால் சாவுவரும் - எல்லாம்
முடிந்து பாழாகும்!

கண்ணீர் உலகுண்டே - அதனைக்
கையால் தழுவிடுவாய்
தண்ணீர்ப் பெயரறியாப் - பாலைத்
தணலின் பரப்பிடையே
வெண்ணிலா நீயாகி - அன்பு
வேதம் ஓதிடுவாய்.
எண்ணம், சொல், செயலை - வாழ்வின்
இசையாய்ப் பொழிந்திடுவாய்!

உன்றன் நிழலதையே - தாங்கள்
ஒண்டும் குடிசையதாய்
துவண்டு இருப்பவரின்-வறுமைத்
தொடர்ச்சி அறுத்திடுவாய்.
குன்றாய் அவர்நிமிர - கருணைக்
குரலில் உசுப்பிவிடு!
நன்றது நீ கேட்டாய் - அருளே
ஞாலத் தவிசளிக்கும்!



## புன்னகைக்குள்

சென்றிடுவாய் சென்றிடுவாய்
என் இனிய மகனே
திட்டமிட்ட உன்பயண
ஒளிப்பாதை மேலே!
நின்றிடவோ, தயங்கிடவோ
நேரமில்லை இனிமேல்
நீ தனியே மிக விரைந்து
துணிவுடனே செல்வாய்!

வல்விதியின் வஞ்சகத்தால்
கீழ்விழுந்த மகனே
மனம்ததும்பும் அன்பால்நீ
அழைத்தழைத்தும் யாரும்
சொல்மதித்தே உன்துணைக்கே
வரவில்லை எனினும்
துளிகூட அஞ்சிடாது
சென்றிடுவாய் மேலே!

உண்டிடவும், ஆடிடவும்
அந்நாளில் சூழ்ந்தே
ஒருகோடித் தோழர்களில்
ஒற்றைஒரு ஆளும்
கொண்டநொடிப் பொழுதேனும்
பரிவுணர்வால் இன்று
கூடவர மறுத்திடினும்
சென்றிடுநீ தனியே!

நீண்டுநெளி முள்வழியில்
நடைநடந்து தேய்ந்து
நின்கால்கள் களைத்திளைத்தே
ரத்தமது தோய
பூண்டதுயர் ஆயிரமும்
புன்னகைக்குள் மறைத்தே
பொன்மகனே, உன்பயணம்
தொடர்ந்திடுவாய் மேலே!



## வெற்றியின் சன்னதி!

முன்னே செல்லும் மூத்த தோழனே!
மூடிய உதடுகளை மூடியயே வைப்பாய்!
பின்னே வந்திடும் பிரிய சோதர!
பேச்சு பித்தளை; மௌனமே பொன்னாம்!

இன்று நாம் உணர்வதை;
இன்று நாம் நினைப்பதை
இதயத் திலேயே வசிக்கச் செய்வோம்!
ஒன்றையும் வெளிச்சமாய் உணர்த்திட வேண்டாம்!

எதற்காக அழுவதும் பிள்ளைத்த தனமாம்!
ஈர இமைகளே தோல்வியின் ஊஞ்சல்!
எதற்கா கவும்நாம் தயங்கிட வேண்டாம்!
ஏறுவோம், ஏறுபோல் முன்னே றுவோம் நாம்!

பிளந்து கிடக்கும் மனத்தின் ஓலம்;
'பேச இயலா சத்திய விம்மல்;
இழந்திட முடியா மடமையின் வெம்மை,
அனைத்தும் கடந்தே அப்பால் போவோம்!

தோளில் உறுத்தும் கடமையின் சுமையைத்
தோல்வியில் ஊறும் கசப்பின் சுமையை
ஆள்பின் ஆளாய் பரிமாறிக் கொள்வோம்!
அடுத்து அடுத்து வெற்றியின் சன்னதி!

இன்ப மகிழ்வதனை எங்கேயோ தேடிநிதம்
துன்பம் அடைகின்ற தோழா கேள்! பொன்புவியில்
வீட்டுக் கதவின் வெளிப்புறத்தில் இல்லையது!
காட்டுகிறேன் உன்னிடமே காண்!

நெய்யும் தறிபோல நெஞ்சமது போராடி
மெய்சோர வேண்டாம் வெறுந்துயரால்- சோதரனே!
இன்றைக் கொருநாள் இருக்கும் பொழுதேனும்
நன்றாக வாழ்ந்தே நகை

இந்நாள் வருகின்ற எச்செயலும் அப்படியே
தன்னால் நிகழத் தடம்விடுவாய்-முன்னாள்போல்
சென்றே அதைத்திருத்திச் சேர்க்காதே உன்வழியில்
இன்றைக்கு மட்டும் இது

உண்ணும் உணவில் உவக்குமொரு காதலிலே
வண்ணமுறும் தொண்டில் வளர்தொழிலில்பண்ணுடனே
ஒன்றும் ஒருயாழாய் உன்னைக் கலந்துவிடு!
இன்றைக்கு மட்டும் இது!

ஊனும் நரம்பும் உரமுற் றெழில் கொழிக்க
ஆன வுடற்பயிற்சி ஆக்கிடுவாய்! - குனியாத
குன்றாய் நிமிர்ந்தே குவலயத்தை நோக்கிடுவாய்!
இன்றைக்கு மட்டும் இது!

கொட்டாவிச் சோம்பலதைக் கும்பிட்டனுப்பி விடு!
மொட்டாம் புதுச்செயலில் மூழ்கிடுவாய்- நிட்டையதில்
நின்றே புவியின் நிழற்கோலம் கண்டுதெளி!
இன்றைக்கு மட்டும் இது.

ஆகும் வழிகளில் ஆத்ம சுகம்காண
ஈகை அறங்கள் இயற்றிடுவாய்-நோகாதே!
வென்று வரும்வாயால் வெல்ல மொழிபேசு!
இன்றைக்கு மட்டும் இது!

கண்டார் விரும்பக் கவர்ச்சித் திறம்காட்டு!
பெண்டோ ரிடத்தே பிணங்காதே! - பண்டேபோல்
கூன்றோர் குற்றம் களையாதே! சீறாதே!
இன்றைக்கு மட்டும் இது

அன்பே ததும்ப அருவே வழிந்தொழுக
இன்சொல்லால் யார்க்கும் இதம்தருவாய்! உன்னையே
துன்றாப் பகைவனையும் சோதரனாய் ஏற்றிடுவாய்!
இன்றைக்கு மட்டும் இது!

நீளும் பெருவாழ்வின் நெட்டைப் புதிர்களுக்கே
நாளொன்றில் தீர்வுவரும் நண்ணாதே வேளைவரும்
என்று பொறுத்திருப்பாய் இன்னல் கருதாமல்!
இன்றைக்கு மட்டும் இது!

இன்றைக்கு மட்டுமென இப்படியோர் நாளதனில்
நன்றுள்ள பாதி நகர்ந்திடுமேல்-என்றைக்கும்
இன்றைக்கு மட்டும் இதுவாகும். ஆமாமாம்!
இன்றைக்கு மட்டும் இது!



## நடந்து கொண்டே இரு

நடந்து கொண்டே இரு.-நீதான்
நடந்து கொண்டே இரு
கடந்தது அனைத்தும் கனவின் குப்பையாய்க்
காற்றின் முதுகில் பின்னே போக
நடந்து கொண்டே இரு! - வெற்றியை
அடைந்து கொண்டே இரு.

அடைத்த கதவுகள் ஆயிர மாயினும்
ஆவேச மூச்சால் முட்டித் திறந்தே
புடைத்த தோள்கள் புடைத்த வாறே
புயலின் கால்களை இரவல் பெற்றே
நடந்து கொண்டே இரு. -குறியை
அடைந்து கொண்டே இரு.

தூக்கம் வாழ்வின் துடிப்பைத் தின்றிடத்
துன்பம் வாழ்வின் வெற்றியை மென்றிட
ஏக்கம் வாழ்வின் நஞ்சாய் நின்றிட
எதிரியாய் உனையே படைத்துக் கொள்ளாமல்
நடந்து கொண்டே இரு! - ஒளியை
அடைந்து கொண்டே இரு.

பள்ளம் கண்டும் பாயா வெள்ளம்
பாரில் உண்டா? பார்த்த துண்டா?
உள்ளம் மின்னினால் கோடி உலகம்
உனது பின்னே ஓடி வருமடா!
நடந்து கொண்டே இரு! வழியை
கடந்து கொண்டே இரு!

கொஞ்சும் தென்றலே சூறை யாயினும்
கூவும் குயிலே கூகையாய் அலறினும்
பஞ்சிடம் சிறகுகளை இரவலாய்ப் பெற்றே
பாதை நீளினும்; பயணம் நீளிலும்
நடந்து கொண்டே இரு! தடைகளைக்
கடந்து கொண்டே இரு!

நெருப்புப் பாலையின் இருப்பை மிதித்தும்
நெட்டைக் காட்டின் விரல்களை நசுக்கியும்
கருப்பு இரவுகள், வெள்ளைப் பகல்கள்
கலந்த நிமிட நேரங்கள் அனைத்தும்
நடந்து கொண்டே இரு! பயணம்
தொடர்ந்து கொண்டே இரு!

ஒருநாள் அந்த உதய சூரியன்
ஒளிமுகம் காட்டும் துளிவினாடிக்கு
திருநாளாய் உனது தேனின் தேதி
தெரியும் வரைக்கும் மானுடப்புயலாய்
நடந்து கொண்டே இரு! மகனே,
நடந்து கொண்டே இரு!



## ஒற்றை மீன்

சாமக்கோழி கூவுது- இருள்
சாகும் முகூர்த்தம் மேவுது!
காமத்தூக்கம் இளைக்குது! - அடிக்
கரும்புத் தூக்கம் முளைக்குது!

நேற்றின்பிள்ளை 'இன்று'! - அதை
நெஞ்சு மொள்ளல் நன்று!
நாற்று நினைவுகள் ஆயிரம்! - அவை
நாளையக் காவியப் பாயிரம்!

வெள்ளம்வந்து வடிந்தால் - ஆறும்
வெற்றுத்தரையின் பள்ளம்!
மெல்லவந்து போன - 'நேற்றை'
மெல்லும் நினைவு குள்ளம்!

சாமக்கோழிக் குரலதே - வரும்
சரித்திரநிமிட நிரலதாம்!
ஊமைவான மூலையில் - சுடரும்
ஒற்றைமீனே தலைச்சுழி!

இரவின் இருட்டுப் புழுதியில் - 'நேற்'றின்
எச்ச சொச்சம் நழுவட்டும்,
வரவுவைக்க 'இன்றி'தோ - உனது
வாசல் கதவைத் தழுவுது!

சோம்பல்குறட்டைக் கணக்குகள் - நேற்றைய
சோடை வறட்டுப் பிணக்குகள்
ஆம்பல் வேரின் சகதியாய் - 'இன்றி'ன்
அடியில் சென்று மக்கட்டும்!

இன்று வந்தது 'இன்று' - என்றே
எக்களிப்பாய் நன்றே!
குன்றுவீடு போகும் - தங்கக்
குருவியும் எழுந்ததும் காண்பாய்!

சாமக்கோழி கூவுது! - நியதி
தர்மப்பாதை பாவுது!
சாமக்கோழிகள் கூவட்டும்! - புதுப்புது
தர்மப் பாதைகள் பாவட்டும்!



## தங்கமே தங்கம்!

பன்னூறு ஆண்டுகட்கும் மேலாகத் தொடர்ந்தே
பாரிடையே - நாடெதிலும் சமூகத்தின் நோக்கில் -
பொன்னுக்கோர் 'தனிமதிப்பு' வளர்ந்துவரும் விந்தைப்
பொருளியலை உய்த்துணர்வார் காணுகின்ற உண்மை!
மன்னர் முதல் மக்கள் வரை தங்கமெனும் அந்த
மாயமகள் பூசைக்கே ஆவியுடல் ஈந்தார்!
பின்னெழுந்த கொடுங்கோலர் கொள்ளையருங் கூடப்
பெரும்பொன்னை குவித்துத்தான் ஆட்டமெலாம்
போட்டார்!

அடிமையெனும் தளைமுறிக்க எழுந்தவர்க்கும் கூட
அப்பொன்னே திரைமறைவில் வெடிமருந்தாய் ஆச்சு!
மிடிமையினை மன்பதையில் பரவலாக விதைத்தே
மேட்டுக்குடி தலைக்கொழுப்பாய் பூட்டறையில் நுழைந்தே
படிப்படியாய் வாணிபத்தின் குருதிஎன ஆச்சு!
பணப்புழக்கச் செலவாணித் செயல்முறையார் அரசின்
'கடிவாளம்' என்னுமொரு விபரீதத் தகுதி
காலத்தால் பொன்னுக்கே வந்தடையலாச்சு!

ஆதிமுதல் இத்தேதி ஈறாக எந்த
அரசாலும் தங்கமது வீழ்ந்ததுவே இல்லை!
சாதிஇன மதமொழிகள் பண்பாடு எல்லாம்
தங்கத்தின் இளிப்புக்கே இன்றுவரை அடிமை!
நீதிஎனும் தேவதையும் சிலவேளை தங்க
நிழலுக்குள் புகுவதாலே உருமாறல் உண்டே!
மேதினியின் பரப்பனைத்தும் சமதர்மம் உழுதே
மேடுபள்ளம் நிலவும்வரை தங்கந்தான் வெல்லும்!

மக்களுக்கு மக்களாலே இயங்குகின்ற அரசாம்
மாண்புவளர் குடியரசு ஆள்கையதும் இன்று
தக்கஎழில் வலுவுற்றே ஆரோக்கியம் காணத்
தங்கந்தான் சத்துமிகு மாத்திரையாய் ஆகும்!
'விக்குகின்ற நிதிக்குறைகள்' அரசதற்கே நேரே -
'வீங்குகின்ற பணநோயால்' விலைவாசி ஏற
எக்களிக்கும் ப்ணமுதலைக் குடலுக்குள் ஓடி
இரகசியமாய்த் துயில்பொன்னே காரணமாய் ஆகும்!

எத்தகைய சோதனைக்கும் சாதனைக்கும் நாமே
எப்போதும் முன்னோடும் தூதுவராய் ஆனோம்!
வித்தகங்கள்; தத்துவங்கள்; வீரமுறை பலவும்
வெளிஉலகின் கைகளிலே நாமீந்தோம் பரிசாய்!
கொத்தடிமை கொன்றொழித்தே மக்களாட்சி பொதுமை
கொற்றத்தின் அறங்காட்டும் முதல்வர்களாய ஆனோம்!
இத்தருணம் - பகைப்பதர்கள் சலசலக்கும் நேரம்
இன்னுமொரு அற்புதத்தை நாம்நிகழ்த்த வேண்டும்!

''தீயவரால் நெருக்கடிகள் முற்றுகின்ற இந்நாள்
தேசத்தின் செல்வவளம் நிலைத்தெழுந்து பூக்க;
காயாக இருக்கின்ற திட்டங்கள் கனியக்
கண்ணிமைநேர் படைபலத்தால் பாதுகாப்பே ஓங்க
நேயமொடு மனம் திறந்தே மக்களொடு வணிகர்
நிறைதொழிலின் அதிபர்களும் முன்னணியில் வந்தே
ஆயபல பேருதவி அத்தனையும் செய்தல்
அவசரமாம் அவசியமாம் முதற்கடமை ஆகும்!

"குறிப்பாக மக்களிடை பலவாறாய் இன்று
குவிந்திருக்கும் தங்கத்தில் ஒருநூறுகோடி
பெறுமான ரூபாய்க்குப் பொன்திரட்டித் தருதல்
பெருவணிகர்தொழிலபதிபர் செயத்தகுமோர் பணியாம்!
பொறுப்பாக எல்லாரும் அரசோடு சேர்ந்து
புனிதமிகு இம்முனைப்பில் மெய்யாக உழைத்தால்
முறையான பொருளியலில் புதுமலர்ச்சி தோன்றும்!
மோதவரும் இன்னலெல்லாம் தகர்த்துவிடல் கூடும்!

"ஆயிரத்துத் தொளாயிரத்தென்பத்தோராம் ஆண்டில்
ஆக்கநலப் பொருள்வளத்தைப் பாரதந்தான் எட்டி
மேயதுறை அனைத்திலுமே நிறைவெய்திக் கொழிக்கும்
விருப்பமுறின் அந்நேரம் இத்தங்கம் யாவும்
தூயபெரும் நன்றியுடன் மக்களிடமே அரசு
துளிதயக்கம் காட்டாமல் அப்படியே கொடுக்கும்!
தாயகமே குரல்கொடுத்தாற்போல் அசோக் மேத்தா
தருணத்தில் விடுத்ததொரு வேண்டுகோளாம் இதுவே!

கட்டளைபோல் இக்குரலை நாமேற்ற, தங்கக்
கட்டிகளைப் பாளத்தை அரசிடத்தே ஈவோம்!
நட்டமிதில் சிறிதேனும் நமதில்லை! மாறாய்
நாட்டுவளம் பொங்குவதே பெருலாபம் அன்றோ?
தொட்டிமுதல் காடுவரை தங்கத்தை வீணே
சுமந்ததினால், காத்ததினால் என்னபயன் கண்டோம்?
பெட்டகங்கள் திறந்திட்டால்; பெண்மனங்கள் தங்கப்
பித்தொழித்தால் பொருள்நூலில் பொன்னோடு புரளும்!

தாமஸ்ஃபுல் லரெனுமோர் நல்லறிஞன் சொன்னான்:
'தகுபொன்னை உறைகல்லால் இனம்காண்பான்ம னிதன்,
ஊமைஒளி சிந்துகின்ற அப்பொன்னே அவனின்
உண்மை இனத் தரம் காட்டும் உறைகல்லாய் ஆகும்!'
நாமெலாம் பாரதத்தாய் நற்சேய்கள் ஆனால்
நாடொன்றே தெய்வமெனத் துதிப்பவர்கள் என்றால்
காமமுறப் பொன்தேடிப் பதுக்கலையே விட்டுக்
காலத்தின் தராசுகளில் நாமே பொன் ஆவோம்!



## மேலா - கீழா ?

பத்திரிகை ஒன்றில் ரத்தினச் சிற்பமாய்ப்
புகைப்படம் ஒன்று! புகழில் புரளும்
நட்சத் திரப்படம்! 'பேட்டி நாடகம்!'
அதற்காகத் தந்த 'ஆபாச நிலைகள்!'
எப்படி? ஆடை இடுப்பில் இல்லை!
தொப்புளின் தரிசனம்! மோகப் புன்னகை!
வழிய, வழிய வாலிப லீலைகள்!
இருவிழிக் கிடையில் இமைகளின் ஓரம்
காமக் குறும்பின் காந்த வெளிச்சம்!
கைகளால் நடிகை சுழற்றும் கச்சை!

பாதிமார் பகப் பகுதியைப் பிதுக்கிக்
காட்டும் வகையில் காமிராப் பதிவு!
ஐயோ! அதுவே படத்தின் கவர்ச்சி
மைய மாக மின்னும் வர்ணம்!
'மஜ்னு' - 'ரோமியோ' மைனர்கள் அல்ல,
பொக்கைக் கிழடு பொடி டப்பாக்கள்
கைத்தடி ஊன்றும் வகையறாக்கள் கூடக்
கண்ட விநாடியே போதை கொள்ளும்
அயோக்கிய, அக்ரம, ஆபாச வித்தை!

தெய்வ வடிவச் சித்த ரிப்பிலும்,
பக்தியை ஊட்டும் படைப்பிலும் கூடப்
பெண்மை என்னும் புனிதப் பொலிவைப்
பண்படும் கலையின் பரிபக் குவமாய்;
பண்பு கசங்காப் பாங்கில் அமைத்த
நமது மண்ணிலா இந்தக் கோரம்?
கொத்திக் கிழித்த கற்பின் சிதறலில்
பீய்ந்து பொசுங்கிய பெண்மைக் கதறலில்
'திறக்கும் ஆடையில்' வியாபாரம் நடத்தலாம்!
வாடிக்கை யாளர்கள்கூடி வரலாம்!

ஆனால், ஆனால், ஐயகோ! அம்மகோ!
தொட்டில் தொட்டிலாய்த் தொடர்ந்து வந்திடும்
பாரதப் பெண்மை பங்கப் பட்டால் -
நெட்டை வையமே நிர் மூலமாகும்!
தாவணித் தொடங்கப் பதினாறு முழங்களாய்
வளரும் கற்பின் ஆலய மானச்
செந்தமிழ் மண்ணில் இவ்வலங் கோலம்
வந்து குந்தவே வழிவிட லாமா?
அந்தப் படத்தின் சிலேடைத் தலைப்பு:
'மேலா? கீழா?' வெட்கக் கேடு!

பாரின் முகத்தைப் பளிச்செனக் காட்டும்
பாதரச ஆடியே பத்திரிகை தானே?
பண்பாட்டை அழிப்பதா பத்திரிகை தருமம்?
பச்சைப் படங்களா பத்திரிகையின் நெறி?
கழற்றும் கச்சு மேலே போயினும் -
அவிழும் ஆடை கீழே சரியினும் -
கீழே கீழே கீழே யேதான்
பாழாய்ப் போகும் பாரதப்பெண்மை!
எழுதுகோல் தெய்வம் இந்த எழுத்தும் தெய்வம்
என்று சொன்ன மாகவியே மன்னிப்பாயா?



## அண்ணலே வருக!

வீசு தணற்புயல்
விரல்கள் பட்டொரு
வாச மலர்ப்பொழில்
வதையுமா றிந்த
தேசம் நலியது!
திரும்கள் நைகிறாள்!
பூசை புரிகிறோம்!
புகல்தர இன்றும், வா! - மனப்
பூட்டுகள் உடைத்திட வா! வா!!

பாபம் இழைத்தோம்!
பவித்ரம் பூண்டிலோம்!
தீபம் இழந்தோம்!
திசைகளும் காண்கிலோம்!
சாபம் மிதிக்குது!
சழக்குகள் மிஞ்சின!
தாபம் மிகுந்தோம்!
தயாளனே! இன்றும் வா! - உனது
தரும நிழலைத் தா! தா!!

மானுட உடம்பியாய்
மகத்துவ தெய்வமே
வானக அமுதினை
வழங்கிட வந்தனை!
ஆனந்த விடுதலை
அளித்துநீ சென்றனை!
கானக இருளிதோ!
காத்திட இன்றும், வா! - சத்திய
காந்தியை இன்றும், தா! தா!!



## இந்தியா என்றும் இறக்காது!

"துணிவு மிகுந்த இளைஞர்களே!
துள்ளி நிமர்ந்தே நில்லுங்கள்!
பணிகளைக் குவிக்கும் கைகளினால்
பாரத நாட்டை உயர்த்துங்கள்!"

"ஒவ்வொரு இளைஞனும் வீரனேதான்!
உடையாப் பாறை நெஞ்சோன்தான்!
செவ்வையாம் இலட்சியம் ஒன்றினையே
தேசத்துக் களிக்க வந்தோன்தான்!

"குட்டி நாய்கள் குரைத்தாலும்,
கோடை இடிகள் வெடித்தாலும்
எட்டி அஞ்சி ஓடாதீர்!
எதிலும் கோழை ஆகாதீர்!"

என்று முழங்கிய
இமய முரசே!
விவேகா னந்த
வீர ரதமே!

வெளிச்சக் கிழக்கிலும்
விரியுது நரகிருள்!
ஒளிச்சிற கவிழ்க்கும்
உதயப் பறவையாய்

அன்றைய முரசின்
ஆவேச நாக்குடன்
இன்றும் வருவாய்!
இங்கேயே வருவாய்!!

“இந்தியக் குருதி நரம்புகளில்
எய்திப் பாய்ந்து வலுவூட்ட
விந்தை மிக்க மின்நெருப்பே
வெள்ளமாய்ப் பொங்கும் இந்நாள்தான்!

வீரம் மரத்த பாரதம்தான்
வேய்ங்குழல் ஊதினால் திருந்திடுமா ?
பேரிகை ஆயிரம் முழங்கட்டும்!
பெறுவீர் ஆண்மை அம்முழக்கால்!

ஈஸ்வரி சொரூபமே நம்பெண்டீர்!
இன்னல், இழிநிலை அவருற்றால்
தேசம் வாழ வழியேது ?
தெய்வமும் சிரிக்கும் பெண்மகிழ்ந்தால்!

வெற்றுத் தகவல் சேகரிப்பே
வித்தையோ கல்வியோ ஆகாது!
உற்ற ஒழுக்கம்; உயிர் இரக்கம்
ஊட்டும் கல்வியே உயர்கல்வி!

"கடவுளை மறுப்போன் நாத்திகனாய்க்
கருதி வெறுத்தது பழஞ்சமயம்!
திடமாய்த் தனையே நம்பாதோன்
தீய நாத்திகன் இந்நாளில்!

இந்தியா என்றும் இறக்காது!
இறந்தால் உலகில் எது மிஞ்சும் ?
வந்தனைசெய் ஆன்மா பலியாகி
வையமே பணத்தின் கால்வீழும்!

என்று முழங்கிய
இமய முரசே!
வேத யாழே!
வீரக் கனலே!

வெளிச்சக் கிழக்கிலும்
விரியுது நச்சிருள்!
ஒளிச்சிற கவிழ்க்கும்
உதயப் பறவையாய் -

அன்றைய முரசின்
ஆன்மிக நாக்குடன்
இன்றும் வருவாய்!
இங்கேயே வருவாய்!



## சிவப்புத் தேதி

அன்றுதான் இந்த நாட்டார்
அசமந்தத் துயிலை நீக்கி
தின்றிடும் உணவில், ஆசை
தேக்கிடும் உடையில், நேசம்
துன்றிய உறவில், வீரம்
துள்ளிய மொழியில்; நெஞ்சம்
ஒன்றியமதத்தி லெல்லாம்
ஒரேகுல மாகி நின்றார்!

சாதியின் வரப்பைத் தாண்டி,
தனிஇன மதிலைத் தாண்டி,
மேதினி நகைக்கப் போட்ட
வெறுங்கட்சி 'பந்தல்' தாண்டி
நீதியை - மனிதப் பண்பை
நேர்மையைக் காக்க இமய
வீதியில் சென்று நின்ற

வீரமே குலமாய் நின்றார்!
அறுபத் திரண்டாம் ஆண்டின்
அக்டோபர் இருபதாம் நாள்
தறுதலைச் சீன நாய்கள்
தண்பனி வரையின் மீது
குறிவைத்துப் பாய்ந்த போது
குமுறிய கோடி உள்ளம்
நெறிஒன்று காண லாச்சு!
நிஜம்ஒன்றும் கண்ட தன்றே!

அந்தநாள் நமக்கு மட்டும்
அதிர்ச்சியை ஊட்ட வில்லை!
இந்தமா ஞாலம் முற்றும்
இயங்குமோர் ஜனநா யகத்தின்
சிந்தையைக் கிள்ளி, அறத்தின்
சென்னியும் குலுங்க வைத்த
விந்தையாம் விபரீ தத்தின்
விஷக்குறி, சிவப்புத் தேதி!

நம்மையே நமக்கே ஈந்து
நாமாக நாமே ஆகி -
பொய்ம்மையை - வீணாய் அற்பப்
பூசலைத் தொலைத்தோம் அன்றே!
வெம்மையே மறைய அன்பு
வெண்ணிலா வீசக் கண்டோம்!
செம்மையை - அந்த அன்புச்
செழுமையை என்றும் காப்போம்!

*(1963)*



## எண்ணும் எழுத்தும்!

விழுந்ததை எடுப்போம்! கொடுத்ததைக் கேட்போம்!
விதைத்ததை அறுக்காமல் விடவா முடியும் ?
கொழுந்து மனங்களில் செழுந்தேன் பாய்ச்சிக்
கொடிகளைப் படைகளை கொடுப்போம் அவர் பால்,

நொந்த குரல்களே! நொடித்த கால்களே!
நூறாயிரம் சூளுரை முழங்கி எழுவீர்!
வந்த புயலையும் வரும் புயல் களையும்
வழியில் மறிந்தே கடமை காப்போம்!

எரியும் விளக்கை அணைக்கா திருப்போம்!
ஏற்றா விளக்குகளை ஏற்றிக் கொள்வோம்!
சரியும் இடங்களில் அண்டை போட்டே
சாலைகள் அனைத்தும் நமதாய் ஆக்குவோம்!

முதுமையின் மயக்கம்; இளமையின் தயக்கம்
முற்றிலும் களைவோம்! முதலில் களைவோம்!!
பதுமையாக் கிடந்தால்; பழங்கதை பேசினால்
பாவமே மீண்டும் பயிராய் விளையும்!

சந்தையில் வாங்கிய கந்தைத் துணியைச்
சதாராப் பட்டாய்ப் பாவலா செய்வோர்;
'நீதி சாஸ்திரம்' நிதமும் படிப்போர்
நீசக் கரங்களில் புழுதி தூவுவோம்!

பூட்டன் காந்தியும், பாட்டன் நேருவும்
போட்ட பாதையே புனிதப் பாதை!
தோட்டா வேண்டாம்! துப்பாக்கி வேண்டாம்!!
தூய ஆத்ம துணையே போதும்!!

அழுததுபோதும்! அதிர்ந்தது போதும்!!
ஆவியும் மூச்சும் தேசமாய் ஆக்குவோம்!
கழுதைகள் மேயும் இடங்களில் நாளைக்
கல்விச்சாலைகள் தோன்றிட வேண்டும்!!



## பரவட்டும் பஞ்சசீலம்!

அப்போது இரண்டாம் போர் ஓய்ந்த நேரம்!
ஆறாண்டுக் குருதியது காய்ந்த நேரம்!
இப்பாரை விழுங்கவந்த 'பரங்கிக் கூட்டம்';
இங்கிருந்த நரிக்கூட்டம் சாய்த்த பின்னர்,
ஒப்பந்தக் கைகளையே விரித்துக் கொண்டே
உலகத்தின் வல்லரசு மண்ட லங்கள்
தப்பெண்ணம்; எதிர் கொள்கை; அச்சத் தாலே
தனித்தனியே ஈரணியாய் இயங்க லாச்சு!

வையத்து நாடனைத்தும் இவ்விரண்டு
வல்லரசு மண்டலத்தில் ஒன்றி னோடு
கைகுலுக்கி உடன்படிக்கை செய்து கொள்ளும்
கட்டாயம் நேர்ந்திடவே, அமைதி மாதா
மெய்துடித்து நாதியற்றுக் குமுற லானாள்!
விரைவினிலே அமெரிக்காவும் இங்கி லாந்தும்
செய்துகொண்ட அமைப்புக்கு வலிவு சேர்க்க
'நேட்டோ'வும் 'சீட்டோ'வும் தோன்ற லாச்சு!

'தூங்காத துப்பாக்கி நிழலின் கீழ்தான்
தூயமகள் அமைதித்தாய் துயில்வாள், காண்பீர்!
ஆங்காங்கு நாடெல்லாம் படைபெ ருக்கி
ஆயத்தப் போர்நிலையின் முனைப்போ டிருந்தால்
நீங்காத பயம் அகன்றே போரும் ஒழியும்!
நிச்சயமாய் இதுவேவழி!' என்று கூறிப்
பாங்காக வல்லரசு மண்ட லங்கள்
பனிப்போரைக் கெடுபிடியாய் நடத்த லாச்சு!

பனிப்போரே குருதிப்போர் வடிவம் ஏற்கும்
பயங்கரத்தின் குவலயமே வீழ்ந்த வேளை:
தனிப்பகையோ தனி நட்போ ஏது மில்லாத்
தங்கமணித் திருநாடாம் பார தந்தான்,
'பனிப்போரா? ஈதென்ன வெட்கக் கேடு!'
படைப்பெருக்கம்! போர்முனைப்பு! அதேநே ரத்தில்
இனிப்போரே இருக்காதே என்ற கூத்தே
எள்ளளவும் அறிவேற்காக் கேலிக் கூத்தே!

சத்தியமாம், சாசுவதமாம் அமைதி வேண்டும்!
சகாசேர்க்கா நடுநிலைமை கூட்டு சேரா
முத்துநிகர்க் கொள்கையதே எங்கள் கொள்கை
மூள்கின்ற போர்வெறியைத் தணிப்பதற்கு
நித்தியமாம் பரிகாரம் இதுவே!' என்றே
நேரபிரான் திருநாவால் குரல் கொடுத்தார்!
பித்தமெலாம் மெதுவாகத் தெளிய, உலகின்
பேரிருட்டில் இந்தியாவே தீபம் ஆச்சு!

வல்லரசு மண்டலத்தின் பரப்ப னைத்தும்
வானமகன் நேருபிரான் உலவி வந்தான்!
'வல்லமையே அரசி யலாம்!' என்னும் குருட்டு
வாதத்தைத் தகர்த்தெறிந்தான்! என்றும் மாறா
நல்லதொரு நிர்மாண அமைதிக் கொள்கை
நடுநிலைமை ஒன்றே என முழக்க மிட்டான்!
தொல்லைமிகும் பலநாட்டுப் பூசல் தீரத்
துணிவாக நடுநிலைமை காட்டி வென்றான்!

நேருபிரான் பாரத்தின் கொள்கை தன்னை
நியதியிட்டு ஐந்தாக வடித்துத் தந்தான்!
பார்புகழும் மாநாடாம் 'பாண்டூங்' தன்னால்
பஞ்சசீலக் கொள்கையதே கெட்டி யாச்சு!
'மேருமலை சஞ்சீவி' என்றே உலகம்
மேன்மேலும் அதன் மணத்தை நுகர லாச்சு!
சீருயர்ந்த அரசியலாம் விஞ்ஞா னத்தின்
சித்தாந்த சிகரதமாய் அதுவே ஆச்சு!

'பெருநாடோ சிறுநாடோ ஒன்றுக் கொன்று
பிரதான சுயஎல்லை; அதிகா ரத்தை
ஒருமித்த நட்போடு மதித்துக் காத்தல்
ஒன்றின்மீ தொன்றேபடை எடுக்கா திருத்தல்!
ஒருநாடு மற்றொன்றின் உள்விவ காரத்தில்
ஊடாடா தொதுங்கிவிடல்; சமமாம் தகுதி
உருவான் ஆக்கநலம் மாற்றிக் கொள்ளல்;
உளமார்ந்த சகவாழ்வு; அமைதி வேட்கை!

இவ்வைந்தே பாரதத்தின் பஞ்சசீலம்!
இதயமணி நேருபிரான் கண்ட ஞாலம்!
ஒவ்வொன்றும் ஒன்றுக்குள் ஒன்றாய்ப் பின்னி
'ஒருலகக் கன'வதற்குக் கருவாய் ஊன்றிக்
கவ்வுகின்ற வறுமை; பிணி; வர்க்க பேதம்,
கனலுகின்ற போர்வெறிகள் எதுவு மற்றுச்
செவ்வையுற மக்கள்குலம் அன்பில் தோய
தெய்வ வரம் ஒத்ததான ஞான சீலம்!

எத்தனையோ இனக்கூட்டம்; மொழிகள் கூட்டம்;
எத்தனையோ தத்துவங்கள்; கலாச்சா ரங்கள்;
எத்தனையோ அரசியலின் சிந்தாந் தங்கள்!
எல்லாமே சங்கமித்துச் சம்மே ளித்தே
மொத்தமதாய் ஒருசேரக் கலந்து றைந்தே
முழுவலிவு வசீகரங்கள் பெற்றுப் பெற்றே
புத்தம்புது பொன்வையம் மலர்வதற்கே
புனிதமகான் நேருபிரான் வழியே வழியாம்!

*(1964)*



## காஷ்மீர் நமதே!

பொங்கர வாவோம்! பசிப்புலி ஆவோம்!
 பூமியைக் கீறும் எரிமலை ஆவோம்!
மங்கள முரசுக்ள மாற்றுக சுருதியை!
மாணிக்க யாழும் போர்ப்பறை முழங்குக!
பங்கொடு சென்றவர் பாதை இடறி -
பாழ்மனப பெயரின் கைப்பா வையாய்
இங்குறு அறத்தின் எழுச்சியைக் கொய்ய
எல்லை மிதித்தனர்! தொல்லை கொடுத்தனர்!

தெங்குறு காயுடன் இளநீர் போலச்
சேர்ஜன நாயக சோஷ விசத்தைத்
துங்க முறவே தொட்டி விட்டே
சுதந்தரச் சுடரைப் போற்றிடும் நம்மேல் -
சங்கிலித் தொடர்போல் சதியும், கேடும்
தம்கோட் பாடாய் கொண்டலை சழக்கர்:
கங்குவின் கருத்தினர் பழிகொளப் பாய்ந்தே
கவ்வினர் மண்ணை! காறிய துலகம்!

நெறிக ளற்றவர்; முறைகளற்றவர்;
நெஞ்செனும் ஒன்றிலா நிருதர் வழியினர்
வெளியுடன் நம்மேல் சமத்தினர் வீண்போர்!
வென்றோம்! வெல்கிறோம்! இனியும், என்றும்
துறைதுறை யாகத் தொடர்ந்தும் வெல்வோம்!
தோலாத் தோளினர் நமதரும் படையின்
செறியும் சாகசம், தியாகம் கண்டே
சிலிர்த்தது புவியே! செழித்தது வீரம்!

பாரதம் என்பதோர் ஜீவ தத்துவம்!
பாரெனும் தேரதன் அச்சா ணியதுவே!
பாரதம் என்பதோர் பண்பின் ஓவியம்!
பாரினில் அதுவே அன்பின் காவியம்!
பாரதம் என்பதோர் கண்ணாடியாகும்!
பார்முகம் திருத்த வேறொன்றில்லை!
பாரதம் சிரித்தால் பாரே சிரிக்கும்!
பாரதம் சிணுங்கினும் பாரே சிதையும்!

பச்சைக் குருதியைப் பரிமா றியேனும்
பகைவர் கும்பலை நூறி நொறுக்குவோம்!
இச்சைக் குரிய இதய பூமியின்
ஈரப் புகழை என்றுமே காப்போம்!
கொச்சைத் தனங்கள், குதர்க்கம் விடுத்தே
கச்சை வரிந்து கட்டுவீர்! என்றே
காலம் அழைக்குது! கடமை அழுத்துது

கெடுப்பவர் பின்னே நடப்பவர் கெடுவார்!
ஆடன வந்தவர் அரண்டே ஓட
அரிமா நாமென நிரூபணம் செய்தோம்!
'நாடெலாம் ஒருடல்; தாயகம் ஒருயிர்!
நாற்பது கோடிச் சொச்சமும் ஓர்குலம்!'
ஏடெலாம் நாளை இப்படிப் பாடும்
ஈடிலாப் பீடும் எய்திய விட்டோம்!

நொங்கல; பாசல வீரருக் குயிர்தான்!
நொடிக்கொரு முறைமாய் கோழை யுமல்ல
சிங்கங் களெலாம் அணியினில் திரள்வோம்!
தீரர்க ளெல்லாம் பணிசெய விரைவோம்!
தங்கங்க ளன் அன்புடை நெஞ்சத்
தாய்க்குலம் எல்லாம் தகுபொறுப் பேற்போம்!
எங்கிருதவர் படை எத்தனை வரினும்
இன்றுபோல் பாடம் அன்றும் புகட்டுவோம்!

தொல்காப் பியத்தின் சூத்திரம் கற்றோர்
துப்பாக்கி சுட்டிடும் சூட்சமம் கற்போம்!
ஒல்காப் புகழின் 'உரைகள்' நிறுத்தி
உருப்படியான தொண்டுகள் செய்வோம்!
நல்காக் கரம்பு நிலத்திலுங் கூட
நற்பயிர் அனைத்தும் முனைந்தே வளர்ப்போம்!
மங்காத் தொழில்கள் இனிஏ தெனும்படி
மாற்றவர் மருள கைவளம் காட்டுவோம்!

அடக்க விலைக்கும் அரைக்கா சேனும்
அடக்கி விற்றால் இன்றதே வாணிகம்!
முடக்கிய சரக்கை, பதுக்கிய பணத்தை
முற்றிலும் ஈந்தால் இன்றதே தியாகம்!
கொடுக்கும் விருந்தை, கொள்ளும் விருந்தை
குறைத்துக் கொண்டால் இன்றதே பண்பு!
எடுக்கும் செயல்களில், எண்ணும் நினைவில்
'இந்தியா' இருந்தால் இன்றதே பக்தி!

நொண்டி கொண்டி வந்துறு 'நிஜத்தை'
நூறு மணியும் காத்திருந் தேற்போம்!
முண்டி அடித்து முன்னே குதிக்கும்
மொட்டை 'வதந்தி'யை எட்டி உதைப்போம்!
கெண்டை ஒன்று விறாலை விழுங்குமா ?
கேட்பவன் விழித்தால் 'அளப்பவன்' பறப்பான்!
சண்டை நீளினும் அமைதி விறப்பினும்
சத்தியம் மட்டுமே நம்கவசமாகும்!

சீலம் ஐந்தும் அருளிய தேவன்
சிந்தை கவர்ந்த ஜோதி பூமியை
கோலப் பொழிலாம் காஷ்மீர் தன்னை
கொடுமதியாளர்; குரங்குக் குணத்தினர்
நாலங் குலமும் நஞ்சாய்ப் பெற்ற
நாவினர் புரட்டால் நாமா இழப்போம் ?
காலங் குலமும் காஷ்மீர் மண்ணில்
கயவர் ஏந்திடப் போவதே இல்லை!

பொங்கர வாவோம்! பசிப்புலி ஆவோம்!
பூமியைக் கீறும் எரிமலை ஆவோம்!
மங்கள முரசுகள் மாற்றுக சுருதியை!
மாணிக்க யாழும் போர்ப்பறை முழங்குக!
பங்கொடு சென்றவர் பாதை இடறி -
பாழ்மனப் பேயரின் கைப்பா வையாய்
இங்குறு அறத்தின் எழுச்சியைக் கொய்ய
எல்லை மிதித்தனர்! தொல்லை கொடுத்தனர்!

தெங்குறு காயுடன் இளநீர் போலச்
சேர்ஜன நாயக நமதரு மத்தை
துங்க முறவே தொட்டி விட்டே
சுதந்திரச் சுடரைப் போற்றிடும் நம்மேல் -
சங்கிலித் தொடர்போல் சதியும், கேடும்
தம்கோட் பாடாய் கொண்டனை சழக்கர்:
கங்குவின் கருத்தினர் பழிகொளப் பாய்ந்தே
கவ்வினர் மண்ணை! காறிய துலகம்!

நெறிக ளற்றவர்; முறைகளற்றவர்;
நெஞ்செனும் ஒன்றிலா நிருதர் வழியினர்
வெறியுடன் நம்மேல் சுமத்தினர் வீண்போர்!
வென்றோம்! வெல்கிறோம்! இனியும் என்றும்
துறைதுறை யாகத் தொடர்ந்தும் வெல்வோம்!
தோற்கலாத் தோளினர் நமதரும் படையின்
செறியும் சாகசம், தியாகம் கண்டே
சிலிர்த்தது புவியே! செழித்தது வீரம்!

பாரதம் என்பதோர் ஜீவ தத்துவம்!
பாரெனும் தேரதன் அச்சா ணியதுவே!
பாரதம் என்பதோர் பண்பின் ஓவியம்!
பாரினில் அதுவே அன்பின் காவியம்!
பாரதம் என்பதோர் கண்ணாடியாகும்!
பார்முகம் திருத்த வேறொன்றில்லை!
பாரதம் சிரித்தால் பாரே சிரிக்கும்!
பாரதம் சிணுங்கினும் பாரே சிதையும்!

'பச்சைக் குருதியைப் பரிமா றியேனும்
பகைவர் கும்பலை நூறி நொறுக்குவோம்!
இச்சைக் குரிய இதய பூமியின்
ஈரப் புகழை என்றுமே காப்போம்!
கொச்சைத் தனங்கள், குதர்க்கம் விடுத்தே
கூடாரம் ஒன்றாய்; கொடியும் ஒன்றாய்க்
கச்சை வரிந்து கட்டுவீர்!' என்றே
காலம் அழைக்குது! கடமை அழுத்துது!

கேடுசெய்ய வந்தவர் கெடுவார்!
கெடுப்பவர் பின்னே நடப்பவர் கெடுவார்!
ஆடென வந்தவர் அரண்டே ஓட
அரிமா நாமென நிரூபணம் செய்தோம்!
'நாடெலாம் ஒருடல்; தாயகம் ஓருயிர்!
நாற்பது கோடிச் சொச்சமும் ஓர்குலம்! '
ஏடெலாம் நாளை இப்படிப் பாடும்
ஈடிலாப் பீடும் எய்தியே விட்டோம்!

நொங்கல; பாசல வீரருக் குயிர்தான்!
நொடிக்கொரு முறைமாய் கோழை யுமல்ல!
சிங்கங் களெலாம் அணியினில் திரள்வோம்!
தீரர்க ளெல்லாம் பணிசெய விரைவோம்!
தங்கங்க ளன்ன அன்புடை நெஞ்சத்
தாய்க்குலம் எல்லாம் தகுபொறுப் பேற்போம்!
எங்கிருந்தெவர் படை எத்தனை வரினும்
இன்றுபோல் பாடம் என்றும் புகட்டுவோம்!

தொல்காப் பியத்தின் சூத்திரம் கற்றோர்
துப்பாக்கி சுட்டிடும் சூட்சமம் கற்போம்!
ஒல்காப் புகழின் 'உரைகல்' நிறுத்தி
உருப்படியான தொண்டுகள் செய்வோம்!
நல்காக் கரம்பு நிலத்திலுங் கூட
நற்பயிர் அனைத்தும் முனைந்தே வளர்ப்போம்!
மங்காத் தொழில்கள் இனிஏ தெனும்படி
மாற்றவர் மருள கைவளம் காட்டுவோம்!

அடக்க விலைக்கும் அரைக்கா சேனும்
அடக்கி விற்றால் இன்றதே வாணிகம்!
முடக்கிய சரக்கரை, பதுக்கிய பணத்தை
முற்றிலும் ஈந்தால் இன்றதே தியாகம்!
கொடுக்கும் விருந்தை, கொள்ளும் விருந்தை
குறைத்துக் கொண்டால் இன்றதே பண்பு!
எடுக்கும் செயல்களில், எண்ணும் நினைவில்
'இந்தியா' இருந்தால் இன்றதே பக்தி!

நொண்டிக் கொண்டு வந்துறு 'நிஜத்தை'
நூறு மணியும் காத்திருந் தேற்போம்!
முண்டி அடித்து முன்னே குதிக்கும்
மொட்டை 'வதந்தி'யை எட்டி உதைப்போம்!
கெண்டை ஒன்று விறாலை விழுங்குமா ?
கேட்பவன் விழித்தால் 'அளப்பவன்' பறப்பான்!
சண்டை நீளினும் அமைதி இழப்பினும்
சத்தியம் மட்டுமே நம்கவசமாகும்!

சீலம் ஐந்தும் அருளிய தேவன்
சிந்தை கவர்ந்த ஜோதி பூமியை
கோலப் பொழிலாம் 'காஷ்மீர்' தன்னை
கொடுமதியாளர்; குரங்குக் குணத்தினர்
நாலங் குலமும் நஞ்சாய்ப் பெற்ற
நாவினர் புரட்டால் நாமா இழப்போம் ?
காலங் குலமும் காஷ்மீர் மண்ணில்
கயவர் ஏந்திடப் போவதே இல்லை!

*(1965)*



## தலைமை!

'தலைவன் எவன்?' 'தலைமை எது?' கேட்டுக் கேட்டுத்
தனைத்தானே கசப்புடனே குழப்பிக் கொள்ளும்
உலகத்தின் வினாக்களுக்கு விடையே காணோம்!
உதயம்பின் உதயமாகத் 'தலைமை' பற்றிக்
கலகங்கள்; பூசல்களே முளைத்த வாறு.
காலத்தின் தேதிகளும் உதிரலாச்சு!
அலைபோல வந்து விழும்புதிர்க ளையே
அலசுகின்ற அவிழ்கின்ற 'தலைமை' இல்லை!

தலைகொடுக்க; உயிர்கொடுக்க ஏற்றுக் கொள்ளும்
'தலைமை' யினை யார்யாரோ சந்தைச் சரக்காய்
விலைகொடுத்தும் வாங்கிடும் விபரீத தந்தான்
விதிமுறையாய், நடைமுறையாய் ஆகிப் போச்சு!
கலைத்துறையில்; அரசியலில்; தொழிற்துறையில்
'கட்டாயம்' 'மிரட்டல்கள்' கையூட்டெல்லாம்
தலைமையினைத் தேர்ந்தெடுக்கும் அவலத் தையே
தகுதியிலாப் போக்கினையே காணுகின் றோம்!

சூடேறும் அரசியலின் கொந்தளிப்பில்
தோன்றுகின்ற தலைமையெலாம் தலைமை ஆமா ?
நாடோறும் தன்நாமம் 'பஜனை' செய்ய
நாலைந்து 'கைத்தடிகள்'; காகங்களையே
வீட்டேற்றி வைத்தபடி வணிகம் செய்யும்
வியாபாரத் தலைமையெலாம் தலைமை ஆமா ?
மாடாகத் தலையாட்டத் தன்த லையை
வல்லான்கை தருவதுமே தலைமை ஆமோ !

புதன்கிழமை வாய்கிழியச் சொன்ன வற்றைப்
'புளுகு இது' எனமறுத்து 'வெள்ளிக் கிழமை'
பதறாமல் அறிக்கைவிடும் 'வித்தை' எல்லாம்
பண்புள்ள, கற்புள்ள தலைமை ஆமா ?
உதவவரும் கைகளையே தன்த லையை
உருட்டவரும் கத்திதயதாய் கருதி அஞ்சி
கதவடைத்துச் செவிபொத்தி ஜனநாயகத்தின்
கால்நொண்டி ஆக்குவதும் தலைமை ஆமா ?

அறிவாளும், அனுபவத்தின் முதிர்ச்சி; தேர்ச்சி;
ஆளுகின்ற நுட்பமொடு துணிவு; நேர்மை;
குறைநிறைகள் கண்டறியும் நுண்மக் கண்கள்;
கொடும்புயலும் அசைக்காத மலையாய் நின்றே
உறைபனியாய், பேய்மழையாய் நெருப்ப ணைக்கும்
உரநெஞ்சின் உத்தியுடன் வரும்பகைக்கே
அறைமுரசாய் எதிர்நிற்கும் சிங்கக் குரல்கள்
அத்தனையும் ஒன்றுவதே தலைமை ஆகும்!

காசெத்தனை கோடியதும் முன்னே கொட்டிக்
காந்தமெலாம் செய்தாலும் அசைந்தி டாமல்
மாசத்த னையும் துடைத்ததொரு ஜனநாயகத்தின்
மாணிக்கச் சூரியனாய்ச் சமுதாயத்தைத்
தேசலவ வைப்பதுவே தலைமை ஆகும்!
சீர்த்திமிகு தார்மீக உணர்வு ஒன்றே
தேசத்தின் உயிர்மூச்சாய் ஓடச் செய்யும்
செழும்ஞானப் பொக்கிஷமே தலைமை ஆகும்!

கொட்டாமல் விட்டுவிடும் ‘பிள்ளைப்பூச்சி’
குணம்கொண்ட தலைமையாதல் ஒழுங்கே சாயும்!
கொட்டியபடி யேஇருக்கும் ‘தேள்’ குலத்துக்
குணம்காட்டும் தலைமையதால் இயக்கம் மாயும்!
குட்டுமிடம் தெரிந்துமிகக் குட்ட வேண்டும்!
கொஞ்சுமிடம் புரிந்தாழகாய்க் கொஞ்ச வேண்டும்!
‘எட்டாத தொலை’ விலேயோ; கீழேயோ
இருக்காத நிலையதுவே தலைமை ஆகும்!

‘மக்களுக்கு மக்களாலே ஆட்சி’ என்றே
மறைமுகமாய்த ‘தனித்தலைமை’ தனைவெறுத்தான்
மிக்கபுகழ் ஆப்பிரகாம்லிங்கன்! ஆனால்
‘விஞ்சுகின்ற மக்களாட்சிக் கேடு’ தன்னைத்
தக்கதொரு பாத்திரமாம் ஜூலியஸ் சீஸர்
தலைபோன கதைபடைத்து ஷேக்ஸ்பி யர்தான்
ஒக்கவிதம் மறுக்கின்றான்! ரூஸோ கூட
உரங்கொள்ளும் தலைமையினை ஒப்ப வில்லை!

‘பிடித்துவைத்துப்’ பூச்சொரிந்து ‘பிள்ளையாராய்ப்’
பின்வருவோன் ஒருவனையே ஆக்கி வைத்தும்
பிடிக்காத காரணத்தால் ‘வழித்’ தெறிந்தே
‘பீடைஇது’‘ வெறுஞ்சாணி உருண்டை;’ என்றே
தடித்தனமாய்த் தந்திரமாய் விலக்கி வைத்துச்
சாடுவதும் தலைமையதன் பண்பே அல்ல!
இடித்துரைத்தால் செவிகொடுத்து நியாயம் ஆய்ந்து
இளங்குரலை வாழ்த்துவதே தலைமை ஆகும்.



## தங்கக் கரடி!

சமுதாயம் கேட்கின்ற பொழுது போக்குச்
சந்தோஷம் தருவதோடு; கலைகள் எல்லாம்
அமைவான வனிதமான விதத்திலேயே
அடிக்கருத்தின் மேல்ப் பூச்சாய் புதுயு கந்தான்
சமைக்கின்ற மாறுதலைச் சுட்ட வேண்டும்!
‘சாக்லேட்’டாய மருந்துதனைக் கொடுக்க வேண்டும்!
குமைச்சல்களை நமைச்சல்களை யதார்த்த வாதக்
கொள்கைக்காய்த் தீனித்திட்டான் கலையே நோகும்!

‘அப்பல்லோ’ சாகஸத்தால் நிலவை மிதித்தே
அவனியதே முழக்கமிட்டுத் துள்ளும் போதும்
எப்போதோ நைந்துவிட்ட ‘கரு’க்களுக்கே;
இரத்தமிலாச் சோகைக்கருச் சிதைவுகளுக்கே
ஒப்பேற்றும் கதைஉருக்கள் கொடுக்கலாமா ?
உருப்படுமா சினிமாதான்! செக்குச் சுவட்டில்
சப்பாணியாய் இனிமேலும் நகர்ந்தோ மானால்
சந்தனமா பூசுவார்கள்? கரியே கிடைக்கும்!

நூயிரம் மாறுதல்கள் அலை அலையாய்
நொடிக்குநொடி நம்வாழ்வை மோதும் போது
கூறாத புத்தம்புதுக் கருவும்; கதையும்
கொண்டுவர எண்ணற்றோர் துடிக்கும்போது
மாறாக 'நான்குசுவர்' திரைக்களத்தை
மையமிட்டுக் கதைபண்ணிக் கொண்டிருந்தால்
ஏறாத 'புகழ் ஏணி' தமிழின் மண்ணில்
எடுத்தடிதான் வைத்திடுமா ? பகலின் கனவே!

விஞ்ஞான பிரம்மாக்கள் உலகுக் கீயும்
விந்தைகளை; அற்புதத்தைப் படக்க தையாய்
நெஞ்சாரப் புகழும்படி எடுக்கின் றார்கள்!
நிதநிதமும் புரட்சியினைப் புரிகின்றார்கள்!
அஞ்சாமல் செலவிட்டும்; உழைத்து ழைத்தும்
அதிசயத்தை விளைக்கின்றார் அயல்நாட் டார்கள்!
பிஞ்சாக வெம்புகின்றோம்! நாமோ கலையைப்
'பொறி கடலை அங்காடி' ஆக்கி விட்டோம்!

முன்னேறும் வாழ்க்கையதின் வேக மூச்சை;
முழுமையுள்ள மானுடத்தின் தார்மீக கத்தை;
எந்நேரமும் களைத்துவிழா வீரர் கூட்ட
எக்காலச் சிரிப்புகளைக் காட்டினோமா ?
இன்னமும்நாம் காதலென்னும் கூடைக்குள்ளே
இருக்கின்றோம்! குடும்பக்கதை என்னும் சாக்கில்
சொன்னதையே சொல்கின்றோம்! 'அண்ணன் - தங்கை'
சுகதியாக 'புளிக்கூழே' காய்ச்சு கின்றோம்!

'காலிங்பெல்' இருக்கையிலே, நமையழைக்கக்
கதவிடிக்கும் 'அம்மாமி' 'அறிவா' இன்னும் ?
'ஸீலிங்'கே சட்டமதாய் வந்த பின்னும்
'திருநாளைப் போவா'ராம் நந்த னார்தான்
கோலூன்றிச் செஞ்சுருட்டிப் பாட்டுப் பாடிக்
கோபிக்கும் வேதியரைக் கெஞ்சு வதையே;
நாலுமுறை வந்துவிட்ட 'லைலா - மஜ்னு'
'நைந்த கதை' காட்டுவதா, கலைவ ளர்ச்சி ?

வருந்துகின்ற 'சம்காரக்' கதைகள் வேண்டாம்!
மகுடகுல 'அலங்கார'க் கதைகள் வேண்டாம்!
'திருத்துகின்ற' 'பிரச்சார'க் கதைகள் வேண்டாம்!
'தேடுகின்ற' 'சஞ்சாரக்' கதைகள் வேண்டாம்!
'பொருதுகின்ற' 'சிங்காரக்' கதைகள் வேண்டாம்!
'புரளுகின்ற' 'சிருங்கார'க்கதைகள் வேண்டாம்!
'எருது, புலி, நாய், சிங்கம்' காட்சிவைக்கும்
இளிக்கின்ற 'கூடாரக்' கதைகள் வேண்டாம்!

‘நேற்று’களில் நீந்தாமல் ‘இன்று’ பொங்கும்
நீரோடை தேடிடுவோம்! மூழ்கித் திளைப்போம்!
தோற்றத்தையும் தொலைத்ததையும் மொத்த மாகத்
தொகைஎண்ணிப் பெறுகின்ற நம்பிக்கையை
நாற்றங்கால் ஆக்கிடுவோம்! சினிமாத் தமிழின்
நடைமுறையில் புரட்சிகளைப் பெய்து வைப்போம்!
காற்றடிக்கும் நம் பக்கம்! ‘தங்கக் கரடி’
கட்டாயம் இங்கும் வரும்! தமிழும் வெல்லும்!

(குறிப்பு: வையப் புகழை- வரலாற்று வாழ்த்தை தொடர்ந்தே சத்ய ஜித்ரே, விபூதி பானர்ஜியின் ‘தொலை தூர இடி’யை படக்காவியமாய்ப் படைத்த தினாலே ஜெர்மன் படவிழா அரும் பெரும் பரிசாய்த் ‘தங்கக் கரடி’ யை ரே’ய்க்குத் தந்தது! இந்தச் செய்திச் சிந்தையைக் கிள்ள எழுந்த கவிதையின் ரூபம் இதுவே!)

(1974)



## துள்ளி எழு!

என்னருமைச் சோதரனே! இந்நாட்டு மன்ன வனே!
உன்னிரண்டு செவிகளிலே ஒன்றேனும் இன்றைக்குச்
சற்றே செயல் படட்டும்! சாகசத்தை செய்திட்டும்!
கற்றவனோ மற்றவனோ, காலத்தின் விழிப்பறிந்து
இன்னும் நீ உன் திறனை ஏனோ உணரவில்லை!
'தின்னும் தவிட்டுக்குத் தினம் உழைக்கும் பிராணி'யெனச்
செக்கடியின் பாதையிலே சிந்தை மரமரத்துக்
குக்கலுக்கும் கேவலமாய்க் கோணல் வலம் வருகின்றாய்!
முத்துமணித் தவிசேறி 'மோக்ஷா' க்கள் காட்டுகின்ற
பெத்த பெரும் ஆட்கள், பிரபுக்கள் எல்லோரும்
எலக்ஷன் பண்டிகையில் இனாமாக உன்னிடத்தே
கலெக்ஷன் செய்தெடுத்த கௌரவப் பிச்சையது
தத்ததொரு வாழ்வாலே தர்பார் நடத்துகின்றார்!

நொந்து நொடித்து நீ அகத்தடியில் கிடக்கின்றாய்!
ஆமாண்டா தம்பி! 'அசலான' உண்மை இது!
கோமாளி அரசியலில் கொடிபிடிப்போர் அனைவருமே
சாமான்ய மனிதனெனச் சகட்டுமேனிக் கணக்காலே
நாமாவளி பாடி நைச்சியமாய் உன் வோட்டைக்
கறக்க வருகின்றார்! களவாடிப் போகின்றார்!
கிறக்க நிலையில் நீ கேடுணர வாய்ப்பில்லை!
வோட்டர்களின் பட்டியலில் உன் பெயரை மறக்காமல்
போட்டதொரு தொண்டன்றிப் பொறுப்பாக வேறெதுவும்
செய்யத் துணியவில்லை தேச மகாப் புருஷர்கள்!
ஐயகோ சோதரனே! அநியாயம் வேறுண்டா ?
உண்ணும் உணவில் நீ ஒரு மாற்றம் காணவில்லை!

கண்ணையே அழுக்காக்கும் கந்தலுடை மாற்றவில்லை!
மாளிகைகள் வளர்ந்தாலும் மண் குடிசை போகவில்லை!
தூளிகள் மரங்களிலே தோன்றாமல் இருக்கவில்லை!
பொம்மை மரப்பாச்சி போட்டபடி கிடப்பது போல்
வெம்மை வறுமையதில் விழுந்தழுத்திக் கிடக்கின்றாய்!

உன்னை நீ உணர்வதற்கும் உலகாயதம் அறிவதற்கும்
என்னதான் செய்தார்கள், இந்த 'மகா புருஷன்கள்' ?
வாக்காளர் மட்டத்தில் வைக்காமல் சமூகத்தை
ஆக்குகின்ற பிரம்மாவாய் அவர்களுனைத்துதித்தாரா ?
நாகரிகக் கலாசார நற்சிந்தைப் போக்குகளில்
வாகாக உனைவளர்க்க வழியேதும் செய்தாரா ?

போகட்டும் அதுவென்றால் பூப்போன்ற உன் மனதைத்
தீகக்கும் அரசியலில் திணித்து விட்டு நழுவுகின்றார்!
கேழ்வரகா நெய்வடிக்கும் ? கெட்டதொரு அரசியலா
தாழ்வகற்றி உன் வாழ்வைத் தகத்தகாயம் ஆக்கிவிடும் ?
மலைவிளக்காய் மன்பதையின் மனவிளக்காய் இமைக்காமல்
புலை நாற்றம் வீசுகின்ற பொறிவலையாய்க் கலையுலகம்,
பணம் பண்ணும் முதலைகளின் பண்டகச் சாலைகளாய்
கணம் தோறும் படஉலகம் கருத்தின்றிக் கட்டின்றி
மாறிவரும் அவலத்தின் மறுவிளைவு கருதாமல்
சீறிமிகச் சினக்காமல் சிறுபிள்ளை மெத்தனத்தில்
இன்னும் நீ உழன்றிட்டால் இருப்பதுவும் பறிபோகும்!

மின்னி மினுக்குகின்ற மேனாட்டுப் பொய்ச்சரக்கின்
அச்சாகி நம் கலைகள் ஆபாசக் கூத்தாடும்!
கச்சை அவிழ்த்தெறியும் கண்றாவி மிஞ்சிவிடும்!
கூலியது குறைந்தால் கூப்பாடு போடும் நீ;
ஆலைக் கதவடைப்பு ஆர்ப்பாட்டம் செய்யும் நீ
வயற்காட்டுத் தகராறில் வழக்காடப் போகும் நீ;
அயலார்கள் ஊடுருவின் அனல் மலையாய் வெடிக்கும் நீ,
களிப்பூட்டும் உன்கலையில் கண்ணியத்தைச் சாகடிக்கும்
வெளிப் புறத்து உறவுகளை விளையாட விடலாமா ?

கண்ணுக்கு கண்தோறும் காட்சிகளின் ருசிமாறும்!
மண்ணுக்கு மண்தோறும் மனப்பண்பின் பசிமாறும்!
பைந்தமிழ் குரல்கொடுக்கக் காற்றோடு கொஞ்சிவரும்
பைரவியின் போதையதைப் பட்டாசு தந்திடுமோ ?
நாமுண்டு! நம் கலையின் நல்லதொரு மரபுண்டு!!
சேமங்கள் அத்தனைக்கும் திருக்கோயில் அதுவாகும்!
இருந்து வரும் பழங்கலைகள்; இன்று வரும் புதுக்கலைகள்
பொருந்தத்தரும் நலமான பொலிவை வலிவை யெல்லாம்
அள்ளி இனி வழங்குதற்கே அச்சாணி எனத்தகும் நீ
துள்ளி எழுந்திராடா! தோள்தட்டிப் புரட்சியிடு!



## பூஞ்சோலை!

டெலிவிஷனுக் காவென பேரைப்பெற்ற
சினிமாதான் மூத்தகலை! இலக்கி யத்தின்
ஒலித்தொகையும், ஒளித்தோகையும் ஒன்று கூடி
உருவாகும் அற்புதமே திரைக்க லையாம்!
மலிவான - எளிதான பொழுது போக்காய்
மக்களுக்கே இருப்பதின்று சினிமா ஒன்றே!
பொலிவூட்டி வலுவூட்டிச் சமுதா யத்தைப்
பூக்கவைக்கும் பெரும்பொறுப்பும் அதற்கே உண்டு!

மாறிவரும் லௌகீகத் தட்ப வெப்பம்;
'மனித' த்தின் நெடுமூச்சு ஆசாபாசம்;
மீறிவரும் உள்ளுணர்வின் பரிணா மங்கள்
மிஞ்சிவரும் விஞ்ஞான வெற்றி - தோல்வி
ஊறிவரும் சமதர்மப் பொன்யு கத்தின்
ஓவியத்துப் பின்னணிகள் - இவைகள் யாவும்
ஊறிவரும் கருத்துள்ள கதையாய் ஒன்றை
இங்குள்ளோர் எடுத்தாரா ? - வெட்கக்கோடு!

சத்தில்லாக் - கருவில்லாச் சக்கை தன்னை
சக்கரத்தின் சுழற்சிபோ லொரே கதையை
'சத்திரத்தின் மறுபிறவி'உணவகத்தில்
சட்டினிக்கும், பொறியலுக்கும், சாம்பா ருக்கும்
கத்திரிக்காய் எடுக்கின்ற அவதா ரம்போல்
'காதல்வகை முக்கோணக்' குப்பை யையே
எத்தனையோ தலைப்புகளில் எடுத்தெ டுத்தே
ஏய்க்கின்றார், தேய்க்கின்றார் கலைத்துறையை!

பத்தெட்டுச் 'சிறுபசங்கள்' கூடிக்கொண்டே,
பதினெட்டாம் பெருக்கன்றோர் அட்டைத் தேரின்
மத்தியிலே 'சாமி' எனச் சிறுப டத்தை
மாட்டிவைத் தலங்கரித்தே இழுத்த லைவார்!
சத்தமிட் டுக் கூத்தடிப்பார்! - அதனைப் போல
'ஸ்டார் நடிகர்; சதைக் காட்சி இரண்டை மட்டும்
அத்திவார பலமாக்க கருதிக் கொண்டு
'ஆஹா ஹா இது வேகலை!' என்கின்றார்கள்!

கலைஎன்றால், அதற்கும்ஒரு நோக்கம் வேண்டும்!
கட்டாயம் அந்நோக்கில் தூய்மை வேண்டும்!
'கலைஎன்றால் கலையேதான்' அதனின் நோக்கோ
களிப்பூட்டல் மக்களுக்கே!' என்றோர் கருத்தும்,
'கலைஎன்றால் கல்வியதன் மறுப திப்பே!
கற்பித்தலே அதன்குறிக்கோள்!' என்றோர்கருத்தும்
நிலவுகின்ற 'இருதுருவக் கொள்கை' உண்டு!
நிஜம்என்ன ? இரண்டுமில்லை! இரண்டுமேதான்!!

அன்றிருந்த கலைகளெல்லாம் பகட்டுச் சின்னம்!
அரண்மனையின் - மாளிகையின் சீத னங்கள்!
மன்றடைந்துக் கலைவிருந்தை மாந்து கின்ற
மக்களுக்கும் அவைகளுக்கும் தொடர்பே இல்லை!
இன்றிருக்கும் கலைத்துறையின் நிலையில் நோக்கில்
எப்பக்கம் பார்த்தாலும் 'மக்களின் தேவை'
ஒன்றிருக்கும் நிச்சயமாய்! கல்வி, களிப்பு
ஒத்தவிதம் கலந்தகலை இந்நாள் படைப்பே!

சினிமாக்கலைக் கர்த்தாக்களின் 'மெக்கா' வாகத்
திகழ்கின்ற ஹாலிவுட்டுக் காரர் கூடத்
தனிக்கருத்தோ தனிநபரோ மைய மாகத்
தாங்கிவரும் 'நேர்கோட்டு'க் கதைகளையே
இனிக்கும்படிப் படமெடுத்துச் செழிக்கின் றார்கள்!
இங்குள்ளோர் கலைவிழிப்புத் துளியு மின்றிக்
'கனி ஒதுக்கக் காய்பொறுக்கி'க் தொலைக்கின் றாரே!
கலை எழிலை, மண்பதையைக் கெடுக்கின் றாரே!

திரைக்கலையின் 'முழுவட்ட' ஷேம லாபம்
செழுங்கருத்தைச் சுமந்துவரும் உயிர்க்க தையில்
வரையறுத்து முன்கூட்டித் திட்ட மிட்ட
வரம்பகலாப் படப்பிடிப்புச் செலவின் தொகையில்
'கரைகண்ட வியாபாரக் கைகள்' மாறிக்
கலைமூச்சே தம்மூச்சாய், தேசீ யத்தின்
நுரைகட்டும் புதுத்தேவை உணர்வோர் கரங்கள்
நுழைவதிலுமே இனியுண்டு! மறக்க வேண்டாம்!

'நூ றாம்நாள் விழா'க் கொள்ளும் படங்கள் வேண்டாம்!
நுட்பங்கள் திட்பங்கள் கொப்ப ளிக்க
மாறுதலும், வேர்க்கருத்தும் பிரம்மிப் பூட்ட
'மனிதனை ஒரு மனிதனாக மட்டும் காட்டும்'
'ஆறுநாள்' மட்டும் ஓடும் சித்தி ரத்தை
அஞ்சாமல் எடுப்பவர்கள் யாவ ரேனும்
நூ றுகிலோ சர்க்கரையை அவர்வாய் போட்டு
நுவன்றிடுவோம் வாழ்த்தனைத்தும்! 'அவரே' தேவை!

படமனைகள் களியாட்டக் கூடம் அல்ல!
பஜனைமடம், சங்கீத சபாக்கள் அல்ல!
படமனைகள் 'அ, ஆ' -வின் பள்ளி அல்ல!
பரமார்த்த, அரசியலின் மேடை அல்ல!
படமனைகள் வட்டிக்கடைக் கல்லா அல்ல!
பாமரரின் வழிபாட்டுத் தலங்கள் அல்ல!
படமனைகள் இனி, புதிய வையகத்துப்
பசுங்கனவின் பூஞ்சோலை ஆமாம்! ஆமாம்!!



## திசைகளின் கூத்து!

எடுப்பு :

இன்றொரு நாளும் பூத்ததடா! - வாழ்வாம்
இன்கனித் தோட்ட பாத்தியிலே...

(இன்றொரு நாளும்)

தொடுப்பு :

கன்றாய் நட்ட அறத்தின் கொடியில் - அதன்
காப்பாய் இட்ட கருணையின் மடியில்...

(இன்றொரு நாளும்)

முடிப்பு : 1

காலமாம் புயலின் கைகளில் விழாமல்
கயமையாம் வெயிலின் சூட்டினில் படாமல்
ஞாலமே தொழுதிடும் குறள்மறை போலே
நறுமணத் தென்றல் வருவதைப் போலே...

(இன்றொரு நாளும்)

முடிப்பு : 2

பூக்கும் கோடி மலர்கள் எல்லாம்
புகலும் வாழ்வின் ரகசியம் சொல்ல
நோக்கும் திசைகள் நடத்தும் கூத்தில்
நோகா அறத்தின் வெற்றியே துள்ள...

(இன்றொரு நாளும்)

*(ராகம் : மணிரங்கு)*



## அகிலத்தின் அரசி!

எடுப்பு :

பூ பழ தாம்பூல சந்தனம் - படைத்துனைப்
போற்றுகின்றோம் எந்தாயே! வந்தனம்! வந்தனம் !!

(பூ பழ தாம்பூல)

தொடுப்பு :

மாபெரும் பாரத மங்கள மாதா! - நாங்கள்
வாழ்வுற அருள்தவழ் மந்திரம் தா! தா!!

(பூ பழ தாம்பூல)

முடிப்பு : 1

கங்கையின் கோதுமையாய் உதிரம் தருவாயே!
காவிரியின் நெல்லாக உயிர்க்கொடு ப்பாயே!
திங்கள்தோய் இமயமாய்த் தென்கடல் குமரியாய்த்
திகழ்ந்தோங்கும் நீயன்றோ அகிலத்தின்
அரசியாம்!...

(பூ பழ தாம்பூல)

முடிப்பு : 2

உதயவான் கதிரோன் ஒளிக்கரம் கோடியால்
உனைப்பாடிப் பரவவே இன்றிதோ வருகிறான்!
நதியும் பொழிலும் நல்லிசைக் குயிலும் போல்
நாங்களும் நின்கழல் நனிதொழ விழைந்தோம்!...

(பூ பழ தாம்பூல)

*(ராகம் : தேவகாந்தாரி மற்றும் ஆரபி)*



## தாயே வந்து விளக்கேற்று!

தாயே வந்து விளக்கேற்று! - ஞானத்
தமிழே வந்து விளக்கேற்று!
ஆயிரம் மனைகள் ஒளியுறவே - பகையாம்
அச்சம், மடமை விடைபெறவே
தோயும் அன்பினை நெய்யாய்ப் பெய்தே - உள்ளத்
தூய்மைத் துணிவைத் திரியாய்ச் செய்தே
(தாயே வந்து விளக்கேற்று! )

கனியும் இதய கருணைச் சுடராக - அறிவின்
கனலதே சாந்தக் கொழுந்தாய்ப் படர்ந்தாட
இனிஇலை இருளாம் அரக்கனின் வேலை! - எங்கும்
எழுந்தது காண் காண் அருளதன் லீலை!
(தாயே வந்து விளக்கேற்று! )

சத்தியம் எனுமொரு மணிவிளக்கே - தெய்வ
தருமம் எனுமொரு அணிவிளக்கே
வித்தகம் எனுமொரு புகழ்விளக்கே - உன்றன்
வீட்டினில் மன்றினில் திகழ் விளக்காகத்
(தாயே வந்து விளக்கேற்று! )

*(ராகம்: புன்னாகவராளி)*





இயற்கையைப் பற்றி நுட்பமாக கவனிக்கிற கவிதைகளின் பரிணாம வளர்ச்சியின் பிற்பகுதியில், சமூகம் குறித்த முற்போக்குக் கருத்துக்களை அவற்றின் மீது தற்குறிப்பாக ஏற்றிவிடுகிற ஒருபாணி திராவிட சிந்தனையினால் பாதிக்கப்பட்ட பாவேந்தர் பாரதிதாசன் தொட்டு கலைஞர் கருணாநிதி வரை, திராவிட சிந்தனை சார்ந்த கலை இலக்கிய வெளிப்பாட்டில் நாம் காண முடியும். இந்த திராவிட இலக்கிய பாணியை வ.கோ.சண்முகம் அடிக்கடி கையாள்வதை நாம் இவரது கவிதைகளில் காணமுடிகிறது.

இலக்கிய விமர்சகர்

இந்திரன்